இவன்தான் கிரீஷ் மூன்று மாதக் குழந்தை. பிறந்த முதல் வாரத்திலிருந்து இவன் அமுல்ஸ்ப்ரே சாப்பிட்டு வருகிறான். இவனது வளர்ச்சி வியக்கும்படியாக இருக்கிறது.

# இப்பொழுது அவனைப் பாருங்கள்!

"அமுல்ஸ்ப்ரே சாப்பிட்டு உயிர்த்துடிப்புடன் விளங்கும் இவன், நாள்தோறும் அறிவு வளர்ச்சியும் பெற்று வருகிறான்" என்கிறார், 13 மாதக் குழந்தையான கிரீஷின் தந்தை திரு. திலீப் சௌபல்.

உங்கள் குழந்தையின் எடை, பிறந்த ஆறு மாதங்களுக்குள் இரட்டிப்பாகவும், ஒரு வருடத்துக்குள் மும்மடங்காகவும் அதிகரிக்க வேண்டும். எனவேதான் அமுல்ஸ்ப்ரே, எளிதில் ஜீரணிக்கக் கூடிய சரிவிகித உணவாக அமைக்கப்பட்டுள்ளது. இது குழந்தையின் உடல் வளர்ச்சிக்கு மிகவும் அவசியமான புரதச்சத்தை அதிகமாக கொண்டிருக்கிறது.

குழந்தை உணவுகள் தயாரிக்க அமெரிக்காவில் உபயோகிக்கப்படும் உன்னதமான ஸ்ப்ரே-ட்ரையிங் செய்முறையினால் ஆக்கம்பெற்றது அது.

ஆயிரக்கணக்கான தாய்மார்கள், தங்கள் குழந்தைகள் பிறந்த முதல் வாரத்திலிருந்தே அவற்றிற்குத் தாய்ப் பாலுக்குப் பதிலாகவோ அல்லது உபரி உணவாகவோ அமுல்ஸ்ப்ரே புகட்டி வருகிறார்கள். அதனால்தான், தயாரிக்கத் தொடங்கிய இரண்டு ஆண்டுகளுக்கு உள்ளாகவே அமுல்ஸ்ப்ரே இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள குழந்தை உணவாகிவிட்டது.




## அமுல்ஸ்ப்ரே

தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது!

உங்கள் குழந்தைக்கு
ஜலதோஷம் வரும்போது
எரிச்சலுடன் சிடுசிடுத்து அழுகிறான்,
மூச்சுவிட முடிவதில்லை,
தூங்க முடிவதில்லை.



அப்போது விக்ஸ் வேபோரப்
தாலாட்டுவதுபோல
வேலைசெய்கிறது

# விக்ஸ் வேபோரப் மூக்கு அடைப்பை உடனே போக்குகிறது. தாராளமாக மூச்சுவிட உதவுகிறது. குழந்தை. சுகமடைந்து நிம்மதியாகத் தூங்குகிறது.

**விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு. அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு, இங்கெல்லாம் நேரடியாகத் தடவலாம். ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து குழந்தை உடனே நிவாரணம் பெறுகிறது. தாராளமாக மூச்சுவிடுகிறது. சுகம் அடைகிறது. விக்ஸ்வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.**

1) 

உடம்பின் மேலே

2) 

உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல்வலியைப் போக்குகிறது.

2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழ்ச் சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்குகிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

**முக்கியமான குறிப்புகள்**



விரைவாக குணம்பெற, மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள்.

ஜலதோஷம் நீங்கும்வரை இதைத் தொடர்ந்து செய்து வரவும்.




# ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ்வேபோரப்

SJ

சௌமிய, புரட்டாசி 12 - 1969 செப்டம்பர், 28





| | | |
|---|---|---|
| சோஷலிஸத்தின் பெயரால்... (தலையங்கம்) | — | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — | 6 |
| அன்பார்ந்த நேயர்களுக்கு | — | 9 |
| எனக்கில்லை ஏமாற்றம் | — | 11 |
| விழாவில் விளைந்தவை | — | 13 |
| பக்கத்து வீட்டுப் பிரமுகர் | — | 15 |
| பொன்னியின் செல்வன் | — | 17 |
| ராமாயணம் | — | 28 |
| ஆலைவாய்க் கரும்பு | — | 34 |
| அம்புலிக்கு அப்பால்... | — | 38 |
| ராஜரிஷி | — | 41 |
| தீராத விளையாட்டு | — | 46 |
| ஆப்பிள் மலை! | — | 63 |
| வழித் துணை | — | 64 |
| முதல் சந்திப்பு | — | 71 |
| கந்தனைக் காணாத கண்கள் | — | 72 |
| வட்ட மேஜை | — | 80 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பாங்கு சர்க்கார் உடைமை

பிரமாதம்! இது வரை வந்த பிரதமர்களில் நீங்கள் தான் சிறந்தவர்

வர்த்தக சமுதாயம்




கொள்ளையில் பங்குக்காகக் காத்திருக்கின்றன.



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 29 ★ இதழ் 9

# சோஷலிஸத்தின் பெயரால் அரசுடைமை ஆதிக்கம்

கம்யூனிஸ்டுகள் காங்கிரஸில் ஊடுருவி யிருக்கிறார்கள், அது விரும்பத் தக்கதல்ல என்று ஸ்ரீ நிஜலிங்கப்பா பெங்களூரில் பேசி யிருக்கிறார். இதைச் சகித்துக் கொண்டு கம்யூனிஸ்டுகளைத் தடை செய்யுமாறு காங்கிரஸ் வற்புறுத்தாதவரை பல தீமைகள் விளையும். அவர்களில் ஒரு பிரிவினர் காங்கிரஸில் ஊடுருவுவர். மற்றொரு பிரிவினர் தொழிற் சங்கங்களை யெல்லாம் தம் வசப்படுத்திக் கொள்வர். நிலைமை வசதியாக இருக்கும் இடங்களிலெல்லாம் இன்னொரு பிரிவினர் கலகம் செய்வர். மா — ஸே — துங்கின் போதனைப்படி இன்னும் ஒரு பிரிவினர் பலாத்காரத்திலும், கொரில்லா ரீதியில் உள்நாட்டுப் போர்களிலும் ஈடுபடுவர்.

காங்கிரஸை எதிர்ப்பதற்கு ஒரு புதுக் கட்சி ஏற்பட வேண்டுமென்று ஸ்ரீ நிஜலிங்கப்பா விரும்புகிறார். அவர் சொல்வது சரி. ஆனால் அக்கட்சி ''ஜனநாயக சோஷலிஸத்துக்காக''ப் பாடுபட வேண்டும் என்கிறார். அவரது இந்தக் கருத்துரைக்கு விளக்கம் தேவை. அவர் கோருவது கம்யூனிஸ்டுகள் நாடும் சோஷலிஸம் அல்ல என்று பொருள்படுமானால் நல்லதுதான். காங்கிரஸை எதிர்க்கும் ஒரு கட்சி சோஷலிஸத்துக்காக உழைக்க வேண்டுமென்றால், அந்தச் சோஷலிஸம் அரசுடைமை ஆதிக்கம் செலுத்தும் எதேச்சாதிகாரமாக இருக்கலாகாது. காங்கிரஸ் கோருவது அத்தகைய எதேச்சாதிகாரம்தான். எல்லாக் கட்சிகளுமே சோஷலிஸத்தைப் பொது நோக்கமாகக் கொண்டிருக்கின்றன. இதில் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் கட்சி எதுவாயினும், அதன் ஆதிக்கத்தில் இயங்கும்படி தேசத்தின் பொருளாதார வாழ்வை ஒப்படைத்து விடுவதா? செயலாற்றும் சுதந்திரத்தைத் தனிநபர்களிடமிருந்து அதன் மூலம் பறிப்பதா? இதுதான் கேள்வி. அரசாங்கத்துக்கு எல்லா அதிகாரத்தையும் தந்துவிட்டுப் பிரஜைகளைப் பயனற்றவர்களாக்கி விடாத வகையில் சோஷலிஸ்ட் இலக்குகளை அடைய வேண்டும்.

நாட்டுப் பற்றுள்ள புத்திசாலிகள் தெரிந்துகொள்ள வேண்டிய முக்கியமான விஷயம் ஒன்று உண்டு. பெர்மிட் — லைசென்ஸ் முறையின் மூலம் தொழில் துறையில் ஏகபோக அமைப்புக்களைச் சர்க்கார் சிருஷ்டிக்கின்றது. அவற்றில் சில பெரியவை, சில சிறியவை. இம்மாதிரி நடைபெறுவதன் காரணமாகத்தான் சிலர் மிகப் பெரிய வருமானங்களை அடைய முடிகிறது. சுதந்திரமாக உழைத்து முன்னேறக் கூடிய ஆயிரக் கணக்கான மக்களுக்கு வாய்ப்பு இல்லாதபடி தடை மதில்களை இது எழுப்புகிறது. யுத்த காலத்தில் உருவான பெர்மிட் — லைசென்சு முறை நமது பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கு இடையூறா யிருப்பதுடன், பெரிய ஏற்றத் தாழ்வுகள் நீடிப்பதற்கும் காரணமாகிறது. தனது சொந்தத் தொழில் துறைக் கொள்கையினால் சிருஷ்டிக்கப்பட்ட ஏகபோகங்களைக் கண்டு அரசு பேரச்சமடைவது வெறும் கேலிக் கூத்தாகும். பார்லிமெண்டரி ஆட்சி முறையைப் பற்றி ஸ்ரீமதி இந்திரா காந்தியின் கருத்துக்கள் வேறு, ஸ்ரீ நிஜலிங்கப்பாவின் கருத்துக்கள் வேறு. அரசாங்கத்தின் தயவால் அனுகூலங்களைத் தொடர்ந்து பெறுவதற்கு இவர்களில் யாரை ஆதரிக்க வேண்டும் என்று தெரியாமல், தொழில் துறைத் தலைவர்கள் சங்கடப் படுகிறார்கள். சோஷலிஸ்ட் லட்சியத்தை அடைவதற்காகத் தனி நபர்கள்மீது அரசு ஆதிக்கம் செலுத்துகிறது. இதன் விளைவாகப் போட்டா போட்டி நல்லபடியாக இல்லாது போய் அரசின் தயவில் சிலர் ஏகபோக நிலைகளை அடைய முடிகிறது. அரசுடைமை ஆதிக்கம் என்பது காங்கிரஸ் கையாண்

டாலும், கம்யூனிஸ்ட் கையாண்டாலும் நிலைமையே விளைவிக்கும்.

அரசுடைமை ஆதிக்கம் என்ற கோட்பாட்டைத்தான் 'சோஷலிஸம்' என்ற பெயரால் காங்கிரஸ் கட்சியினர் வாக்காளர் முன் வைத்து ஆதரவு கேட்கிறார்கள். இது தேசப் பொருளாதாரத்துக்குப் பெருந் தீங்கு விளைவிக்கும் என்பதைப் பேராசிரியர் ஷெனாய் நிரூபித்திருக்கிறார்.

அரசுடைமை ஆதிக்கப் பொருளாதாரத்தின் நிலைமைகளைச் சுதந்திரக் கட்சி வெளிப்படுத்த முயன்று வருகிறது. இவ்விஷயமாக மற்ற கட்சிகள் தம் நிலைகளைத் தெளிவு படுத்தவில்லை. ஆனால் பெருநாசம் விளைவிக்கக்கூடிய வகையில் அரசாங்கத்துக்கு முழு அதிகாரம் கொடுத்து, தனி நபர்களின் முயற்சிகளை மட்டந் தட்டுகின்ற கோட்பாட்டைக் காங்கிரசுக்கு வெளியேயுள்ள எந்தக் கட்சியும் ஆதரிக்க விரும்பாது. தனிப்பட்ட பிரஜையின் சுதந்திரம் பறிபோவதை அரசுடைமைஆதிக்க சோஷலிசத்துக்காகக் காங்கிரசுக்கு வெளியேயுள்ள எந்தக் கட்சியும் ஆதரிக்காது.

''காங்கிரஸ்காரர்களாகவே நாங்கள் மடிவோம்'' என்று சிலர் பேசுகிறார்கள். இது ஒரு ராஜீய ஸ்தாபனத்துக்குரிய பேச்சல்ல. தனி ஜாதி முறைப் பேச்சு. நமது சொந்த நம்பிக்கைகள் எவ்வாறு இருந்த போதிலும் எப்பொழுதும் காங்கிரஸ் கொள்கையே தங்கள் கொள்கை என்று பேசுவது அரசியலுக்கு உகந்ததல்ல. அது ஒரு புதுவகை ஜாதி அபிமானம்.

சுதேசியாயினும் விதேசியாயினும் கொடுங்கோன்மை என்பது கொடுங்கோன்மைதான். மக்கள் சந்தர்ப்பம் வாய்க்கையில் எதற்காக வோட்டுச் செய்கிறோம் என்ற உணர்வு இல்லாமல், விஷயம் தெரிந்தவர்கள் சரிவர வழி காட்டாமல், அல்லது ஏதோ ஒரு வகையில் லஞ்சம் வாங்கிக் கொண்டு அல்லது ஜாதி, மத அபிமானத்தின் பேரில் வோட்டுச் செய்தால் பார்லிமெண்டரி ஆட்சி முறையின் மூலமே கொடுங்கோன்மை ஏற்பட முடியும்.

நமது ராஜீய வாழ்வு இருந்த வேண்டுமாயின் என்ன செய்ய வேண்டும்? அரசுடைமை ஆதிக்கக் கொள்கைகளைப் பின்பற்றும் காங்கிரசுக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் எதிராக ஜனநாயக அணி ஒன்று பெடரல் அமைப்பாகத் தோன்ற வேண்டும். அரசுடைமை ஆதிக்கம் கூடாது என்று நினைப்பவர்கள் (ஒருசிலர் நீங்கலாக) எல்லாருமே கண்ட்ரோல்களிலின்று விடுதலையைக் கோருகின்றனர். சர்க்காரின் தயவில்தான் காலம் தள்ளலாம் என்ற நிலையிலிருந்து சிறிய பெரிய தொழில்கள் விடுபட வேண்டும் என்பது அவர்களது கோரிக்கை. லைசென்ஸ் — பெர்மிட் மூலம்தான் தனிநபர் சுதந்திரத்தைப் பெற வேண்டும் என்பது தவறான கருத்து. அரசாங்கமானது மக்களுக்குப் பயன்பட வேண்டிய ஒரு கருவியே தவிர அவர்களது எஜமானனாகி விடக் கூடாது. மக்களின் சுதந்திர வீரியம் ஒடுக்கப்படலாகாது. சர்க்காரது ஒழுங்கு முறைகளின் இழுவில்லாமல், பொருளாதார நியதிகளின் அடிப்படையில் சுதந்திரமாக மக்கள் இயங்க வேண்டும். மக்கள் முட்டாள்கள், அரசாங்கம்தான் விவேகத்தின் உறைவிடம் என்ற எண்ணம் ஒழிய வேண்டும். நாம் இடதுசாரிகளாக இருக்கலாம்; அல்லது வலதுசாரிகளாக இருக்கலாம். ஆனால் நேர்ப்பாதையில் சென்றாக வேண்டிய அவசியம் உண்டு. சமூகத்தின் க்ஷேமநலன் என்ற இலக்கை அடைவதற்கு உற்பத்திப் பெருக்கு தேவை. சோஷலிசம் உற்பத்திக்கு இடைஞ்சல் செய்கிறது. லட்சியத்தை அடைய முடியாதபடி தடை செய்கிறது. தொழில்களையும் வர்த்தகத்தையும் மிக மிகக் குறைந்தபட்ச அளவில்தான் சர்க்கார் நிர்வகிக்க வேண்டும். சுதந்திரக் கட்சிக்கு ஒரு பெரும் பணி உண்டு. கம்யூனிஸத்தை மட்டுமின்றி, கம்யூனிஸ்ட் நாடுகளில் இருப்பது போன்ற வாழ்க்கை வழியில் கொண்டு போய் விடக் கூடிய காங்கிரஸ் கொள்கைகளையும் எதிர்ப்பதே அந்தப் பணி.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ சி.சி. தேசாய் அயல்நாட்டு மந்திரி ஸ்ரீ தினேஷ் சிங்குடன் கடிதப் போக்குவரத்து நடத்தி வருகிறார். அது பாகிஸ்தானுக்கு வட கொரியா ஆயுதங்களை விநியோகம் செய்வதைப் பற்றியது. மந்திரி ஜூன் 28ந் தேதி பதில் அனுப்பினார். விசாரித்து உரிய நடவடிக்கை எடுப்பதாகச் சொன்னார். ஆனால் என்ன நடந்தது என்பதைப் பற்றி மேற்கொண்டு தகவல் இல்லை.

பாகிஸ்தானுக்குத் தரப்படும் ஆயுத உதவி இந்தியாவுக்கு எதிரிடையானது அல்ல என்று சிலர் உறுதி கூறுகிறார்கள். இது அர்த்தமற்றது. இந்த உதவி வேறு எதற்காக வருகிறது? அது ரஷ்யாவையோ சீனாவையோ அல்லது வேறு எந்த நாட்டையோ இலக்காகக் கொண்டிருக்க முடியாது. அந்த உதவி தற்காப்புக்காகத்தான்; தாக்குவதற்காக அல்ல என்று உறுதி கூறுகிறார்கள். இதுவும் பொருளற்றது. தற்காப்புக்கும் தாக்குவதற்கும் செய்யும் ஏற்பாடுகள் ஒரே வகைப்பட்டவை. ஒன்று மற்றொன்றாக மாறக்கூடியவை. நாம் தெரிந்து கொண்டாக வேண்டிய விஷயம் ஒன்றுண்டு. ஆனால் அதை இந்திய சர்க்கார் இன்னும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. பாகிஸ்தானுக்கெதிராக இந்தியாவுக்கு எந்த அயல் நாடும் உதவி செய்யாது. நம்மிரண்டு நாடுகளுக்கிடையே அவை எதனுடனும் 'கோஷ்டி சேராமல்' இருந்து விடும். அவற்றில் சில, முறைப் பிசகாக நடந்து கொண்டு இந்தியாவைப் போல் சமபலம் பாகிஸ்தானுக்கும் இருக்க வேண்டும் என்று கருதித் துணை புரிவதாகவும் இருக்கலாம். எனவே பாகிஸ்தானிய விவகாரங்களில் நட்பு முறையை நாம் கையாள வேண்டுமே ஒழிய பகை வழியில் நமது ராஜீய விவகாரங்கள் போவதாக இருக்கக் கூடாது. என்னவாயினும் நட்பு

வழியிலேயே செல்ல வேண்டும். அந்நிய வல்லரசுகளை எதிர் நோக்குவதால் பயனில்லை. நம்முடைய விவகாரங்களை நாமே உருவாக்கிக் கொண்டு நம்பிக்கையின் அடிப்படையில் நட்பை வளர்க்க வேண்டும். அந்நிலையில் தான் நாம் உண்மையில் சுதந்திரம் உள்ளவர்களாக இருக்க இயலும். இவ்விஷயத்தில் தயக்கம் காட்டுவது தவறான கொள்கையாகும்.

★

சர்வாதிகாரிக்கும், சர்வாதிகாரியாகப் போகிறவர்க்கும் எவ்வளவோ வித்தியாசம். ஆகவே, பிரதமர் தாம் மட்டும் சர்வாதிகாரியாக இருந்தால் இதைச் செய்திருப்பேன், அதைச் செய்திருப்பேன் என்று கூறுவதில் பசையில்லை. அவர் இப்பொழுது தான் சர்வாதிகாரியாவதற்குத் தயாராகி வருகிறார். அவருடைய கம்யூனிஸ்ட் சகாக்கள் தங்கள் குழுவின் நலனைக் கருதியும் பிரதமரின் நலனை முன்னிட்டும் நிதானமாகக் காரியங்கள் செய்யும்படி யோசனை கூறியிருக்கலாம்.

★

காந்தி நூற்றாண்டு விழாக்களில் எடுத்துக் கொள்ளத் தயார் செய்யப்பட்டிருந்த நீண்ட பிரதிக்ஞைக்குப் பதிலாகப் புது பிரதிக்ஞை யொன்று தயார் செய்யப் பட்டிருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது. புதுப் பிரதிக்ஞையின் ஒரு நல்ல அம்சம் என்னவெனில் முந்தியதை விட இது சிறியதாக இருக்கிறது. ஆனால் அது ஓர் அரசியல் அறிக்கை போலிருக்கிறதே தவிர காந்தி மகானின் வாழ்க்கைக் குறிக்கோளைக் கடைப்பிடிக்கச் செய்வதாக இல்லை. பல விஷயங்கள் அதில் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால், சத்தியம், அஹிம்சை, அன்பு, நேர்மை, தர்மம் பற்றி ஒன்றுமே இல்லை.

★

சமீபத்தில் எல்லாரும் பார்த்துச் சிரிக்கும்படி நமது அரசியலில் நிலவிய ஒழுக்கமற்ற தன்மையைத் தொடர்ந்து, ஒழுக்கம், கட்டுப்பாடுகளைப் பற்றி ஹிதோபதேசங்கள் அளிக்கப் பலர் தொடங்கியிருக்கின்றனர். அரசியல் தலைவர்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பதால் கிடைக்கக் கூடிய பதவிச் சலுகைகளை உத்தேசித்து, அவர்களுக்கு அடங்கி நடந்து கொள்ளுவது ஒழுக்கமாகாது. தர்மத்தின் அடிப்படையில் உள்ளத்திலிருந்து வெளிப்படும் கட்டுப்பாடே ஒழுக்கமாகும். வெளியிலிருந்து வரும் பலாத்காரங்களுக்குப் பயந்தோ சுயநலம் கருதியோ அடங்கி நடந்து கொள்ளுதல் கட்டுப்பாடோ ஒழுக்கமோ ஆகாது. ஒழுக்கம் என்பது சுயமாக விதித்துக் கொள்ளும் கட்டுப்பாடாகும். இதுதான் பாரதப் பண்பாக விளங்க வேண்டும் என்று மகாத்மா விரும்பினார்.

★

சொத்துக்களுக்கு உச்ச வரம்பு ஏற்படுத்துவது பற்றி நடக்கும் பேச்சுக்கள் நடைமுறைக்கு ஒவ்வாததாகவும், அர்த்தமற்றதாகவும் அனாவசியமானதாகவும் எனக்குப் படுகிறது. ஒருவேளை எனக்கு இதில் அதிக அனுபவமில்லாமல் இருக்கலாம். பெரும்பாலான நம் மக்கள் வாரிசு உரிமைச் சட்டங்களுக்கு உட்பட்டவர்கள். ஒரு தலைமுறைக் காலத்தில் எல்லாச் சொத்துக்களும் ஐந்து கூறுகளுக்கு மேலாகப் பிரிக்கப்பட்டு விடும். சொத்து உரிமையை அங்கீகரிப்போமானால் அதற்கு உச்சவரம்பு என்பதற்குப் பொருளில்லை என்பதோடு அவசியமுமில்லை. ஒரு வரைக் குறிப்பிட்ட வரம்புக்கு மேல் சொத்துச் சேர்க்காமலிருக்கும்படி தடுத்து நிறுத்துவது எப்படி? வரம்புக்கு மிஞ்சிச் சேமிக்கும் சொத்தைச் சர்க்கார் எடுத்துக் கொண்டுவிடுவதாலோ, அல்லது பொய்–பினாமி–உடைமைக்காரர்களை ஏற்படுத்தும்படி செய்தோ உச்ச வரம்புக்குள் அவர் சொத்தை அடக்குவதா?

எல்லாச் சொத்துக்களையுமே சர்க்கார் உடைமையாக்காத வரையில் தனி மனிதனின் சொத்துக்குக் கிராமப்புறமானாலும் சரி, நகர்ப்புறமானாலும் சரி, வரம்பு கட்டி உச்ச வரம்புச் சட்டத்துக்குள் அடக்கப் பார்த்தால், அது சோம்பலை வளர்த்து, பொய்மைக்கும் புனைசுருட்டுக்கும் இடம் அளிக்குமே தவிர தேச செல்வத்தை வளர்க்காது. இத்தகைய பேச்சுக்களுக்கெல்லாம் காரணம் மக்கள் நலன் என்ற லட்சியத்தை அடையச் செல்லவேண்டிய நீண்ட பாதை, குதிரைக்கு முன்னால் வண்டியைக் கட்டினால் குறுகிவிடும் என்ற மன மயக்கம்தான்! மந்திரிகள், தங்கள் பதவிக்காலம் முடிந்ததும் உலகமும் முடிந்து விடப் போகிறது என்ற கருத்துக் கொண்டு காரியங்கள் செய்வதால்தான் இவ்வளவு குளறுபடிகள்.

# பின்னி
# பருத்தி ஷர்ட்டிங்

கவனத்தை கவரும் ஷர்ட்டிங். கவனத்தை கவரும் தோற்றம். கவனத்தை கவரும் மதிப்பு. கவனத்தை கவரும் உங்களைப் போன்றவர்களுக்கே!

தேர்ந்தெடுக்கப் பலவகைகள்: சேலஞ்ஜர் . செக்மேட் . கன்கார்ட் 'R' கான்கரர் . கரோலின் . எஸ்கார்ட் . ஃபயர்க்ரஸ்ட் . ஃபைபயர்ஃப்பிளை கோல்ட் ஸ்டாண்டர்ட் . ஹைலாண்ட் L 4920 . (லஸ்டலின்) . மாஸ்கட் மரீனு . மோட்டோ . ஓபல் '8' . 5450 . ஸ்டார்லைட் . ஸெனடர் . ட்யூடர் ரோஸ்




**பின்னி-துணி உலகிலே புகழ் பெற்ற பெயர்**

BY-4973

# அன்பார்ந்த  நேயர்களுக்கு

''இந்தியாவுக்குச் சுதந்திரம் சம்பாதித்துத் தந்த நமது அப்பன் (காந்திஜி) வெறும் அரசியல்வாதியல்ல. தெய்வத்தைக் காட்டி வந்த முனிவனுமாவான். காந்தி மகானுடைய அந்தரங்க உள்ளத்தை அறிய வேண்டுமானால் அவருடைய அரசியல் சரித்திரத்தைப் படித்து விட்டால் மட்டும் போதாது. சம்பூர்ண காந்தியை அவருடைய பிரார்த்தனைக் கூட்டங்களில்தான் மக்கள் கண்டார்கள்.''

—இது ராஜாஜியின் பொன்னான வாசகம். காந்தி வாழ்ந்த காலத்தில் அவரது பிரார்த்தனைக் கூட்டத்தில் கலந்து கொள்ளும் வாய்ப்புப் பெற்றவர்கள் மகா பாக்கியசாலிகள். அப்படிக் கலந்து கொள்ளாதவர்கள் பாக்கியத்தில் குறைந்தவர்களல்ல. ஏனெனில், அவர்களுக்குக் கிட்டாத அந்த அனுபவத்தை ராஜாஜி அவர்கள், தமக்கே உரிய தெளிவான, அழகிய தமிழ் நடையில் மீண்டும் கிடைக்கச் செய்யப் போகிறார்கள்.

காந்தியடிகளின் மனத்தைக் கவர்ந்த பிரார்த்தனைப் பாட்டான **ரகுபதி ராகவ** என்ற தலைப்பை வைத்தே காந்தி மகான் அவ்வப்போது பகவத் விஷயமாக எழுதி வந்த வாசகங்களை ராஜாஜி அவர்களே மொழி பெயர்த்து நமக்குத் தந்திருக்கிறார்கள். மகாத்மாவின் அருள்வாக்குகள் ராஜாஜியின் கரத்தால் எழுதப்பட்டு நமக்குக் கிடைக்கிறதென்றால் அதை இரட்டிப்புப் பாக்கியமாகக் கருதலாம் அல்லவா? காந்தி மலராகச் சிறக்கும் அடுத்த வாரக் கல்கியிலிருந்து ''ரகுபதி ராகவ''. என்ற தலைப்பில் இந்த பகவத் விஷயம் தொடர்ந்து இடம் பெறும் என்பதை உவகையோடும் பெருமிதத்தோடும் நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், காந்தி மலருக்கு ராஜாஜி பிரத்தியேகமாக, ஆலமரத்தைத் தன்னுள் அடக்கிய வித்து போன்ற ''நூற்றாண்டு விழா'' என்ற தலைப்பில் சிறிய கட்டுரையை வழங்கி யிருக்கிறார். இது தவிர பிரிட்டிஷ் பிரதமர் ஹரால்ட் வில்சன், இந்தியாவில் அமெரிக்கத் தூதராகப் பணியாற்றிய செஸ்டர் பௌல்ஸ் ஆகியோர் அண்ணலை உலகத் தலைவர் என்ற கோணத்தில் பார்த்து எழுதிய அற்புதமான கட்டுரைகள் இம்மலருக்குத் தனி மதிப்பைத் தருகின்றன. காந்தி அடிகளின் கொள்கைகளுள் மிக முக்கியமான தொன்றான மதுவிலக்கு பற்றிய சிந்தனைத் தெளிவு மிக்க கட்டுரையை டாக்டர் மு. வரதராசன் அளிக்கிறார். காந்தியடிகளிடம் நெருங்கிப் பழகியுள்ள டாக்டர் சுசீலா நய்யார் அண்ணலுக்கு நாம் ஆற்றவேண்டிய கடமைகளை நினைவூட்டுகிறார்.

இதே மலரில் கல்கி துணை ஆசிரியர் கி. ராஜேந்திரன் எழுதும் புதிய தொடர் கதையான **''சாருலதா''** ஆரம்பமாகிறது. ''சாருலதா'' என்ற பெயரில் தொனிக்கும் இனிமை இந்தக் கதை நெடுகிலும் ஊடுருவி வாசகர்களின் மனங்களை ஈர்க்கும். குழந்தைகளை மகிழ்விக்க ''வாண்டு மாமா'' மீண்டும் வருகிறார். விறுவிறுப்பான **''சிலையைத் தேடி...''** சித்திரத் தொடர் படிப்பவரைப் பரபரப்படையச் செய்யும். இதே மலரில் பிரசுரமாகும் **''ஸ்படிகம்''** என்ற தலைப்புக் கொண்ட ''மகரிஷி''யின் குறுநாவல் இலக்கிய நயத்திலும் கதை அமைப்பிலும் முழுமை பெற்றுத் திகழ்வதால் இதை முழு நாவல் என்றே வர்ணிக்கலாம்!

''கார்ட்டூனில் காந்தி'' என்ற அம்சமும் புகைப்பட அநுபந்தமும் இம்மலருக்கு மெருகேற்றுகின்றன. சிறப்புச் சிறுகதையும் உண்டு.

காந்தி சதாப்தி ஆண்டில் அண்ணலின் நினைவுக்கும் தமிழ் மக்களுக்கும் கல்கி ஆற்றிய அரிய தொண்டாகக் கருதி அடுத்த வாரம் கல்கி காந்தி மலரை நேயர்களுக்குச் சமர்ப்பிக்க விருக்கிறேன். வணக்கம்.

சதாசிவம்

---



அடுத்த இதழில்...

மகாத்மா காந்தி எழுதிய

## ரகுபதி ராகவ



தமிழாக்கம்: ராஜாஜி

ஆரம்பமாகிறது.

## இவ்வருஷத்திய
# 4 புதிய
# தீபாவளி கலர்கள்

- அனிதா (ANITA)
- பிருந்தா (BRINDA)
- சித்ரா (CHITRA)
- தீபா (DEEPA)

பட்டுச் சேலைகளைப் பார்த்தீர்களா?

வண்ணச் சேர்க்கையில் உருவாக்கிய புதிய கலர்கள்!

புதிய கலர்கள் எல்லாம்
6 கெஜத்தில் கிடைக்கும்
ஒன் - சைட் பார்டர்களிலும் கிடைக்கும்

# 19 முழம்

எமது ஸ்பெஷல் தயாரிப்புகள்
புதிய கலர்கள் அனைத்தும் கிடைக்கும்

முந்திய தீபாவளி கலர்களுக்கு
இந்தப் புதிய தீபாவளி கலர்கள்
ஜோடியாக இருக்கும்

தேவைக்கு இப்பொழுதே ஆர்டர் கொடுத்தால்
தீபாவளிக்கு சப்ளை செய்யப்படும்

இவை தவிர, அநேக நூதன
ஷேட்களில் எல்லா புதிய தீபாவளி
ரகங்களும் எங்களிடம் கிடைக்கும்

தீபாவளி புதிய கலர்களை அறிமுகம்
செய்யும் முன்னோடிகள்:

# நல்லி சில்க்ஸ்

82, ராயப்பேட்டை ஹைரோடு
லஸ், மயிலாப்பூர் — சென்னை-4
போன்: 74862

தீபாவளி புதிய கலர்கள் மட்டும் அடங்கிய இலவச வண்ண-கார்டுகள் வேண்டுவோர் 20 பைசா ஸ்டாம்புடன் விலாசம் தெளிவாக எழுதி அனுப்பவும்

---

### சாஸ்திரியாரின் நூற்றாண்டு விழா



சமயத்தில்

அவரைப்பற்றி
அறிந்து
நினைவு கூர

அவரே
தமிழில் எழுதிய
இரு நூல்கள்

தாம் கண்டும் கேட்டும் அநுபவித்த விஷயங்களையும் அரசியல் வாழ்க்கையில் திரைக்குப் பின் நடந்த பல விஷயங்களையும் ஓவியம்போல் சித்திரித்திருக்கிறார் ஆசிரியர்.

என் வாழ்க்கையின்
அம்சங்கள் ரூ. 2.25
மீண்டும் வாழ்ந்தால் ரூ. 2.00

### கலைமகள் காரியாலயம்
தபால் பெட்டி 604, சென்னை-4

---

பண்டிட்
டி.கோபாலாசார்லுவின்

# அருணா

## மாதர்களின் ஆரோக்கிய சௌபாக்கியத்திற்கு

1898 ஆண்டிலிருந்து
பிரசித்தி பெற்றது...

### ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட்
100, ஜீ. என். டி. ரோட் • சென்னை-17

# எனக்கில்லை ஏமாற்றம்



மகரம்

என்னுடைய நண்பர்களும், உறவினர்களும் என்னைப் பார்க்கும் போதெல்லாம், 'நீ எப்படி இத்தனை உற்சாகமாகவும், கவலை இல்லாமலும் காட்சி தருகிறாய்? நாங்கள் பொழுது விடிந்தால் பொழுது போனால் படும் கவலைகளுக்குக் கணக்கே இல்லையே!' என்று கேட்பார்கள். எனக்கே நெடு நாள் வரை நான் அப்படி இருப்பதன் காரணம் தெரியாமல் இருந்தது. எனக்குள்ளேயே பல ஆத்ம, மன (பரி) சோதனைகள் செய்து பார்த்துக் கொண்டு கண்டுபிடித்த உண்மையைத்தான் 'உய்ந்து போகிறவர்கள் உய்ந்து போகட்டும்' என்ற நோக்கத்தோடு, 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற ஆன்றோர் வாக்கை ஒட்டி இந்தக் கட்டுரை மூலம் வெளியிடுகிறேன்.

வாழ்க்கை எப்போது கவலை நிறைந்து சோக மயமாகிறது என்பதை யோசித்துப் பாருங்கள். ஏமாற்றம்தான் எல்லாக் கவலைகளுக்கும் பிதா. 'நாம் எதிர்பார்த்தபடி ஒன்றும் இயங்கவில்லையே' என்ற எண்ணம் ஏமாற்ற உணர்ச்சியை அளிக்கும்போது நெஞ்சில் வேதனை நெருடுகிறது, ஆங்காரம் உங்காரம் செய்கிறது, கவலைதான் சோக வலையை வீசி நம்மைச் 'சிக்'கெனப் பிடித்து விடுகிறது!



'ஏமாற்றம் கொள்ளாதீர்கள்' என்ற சூத்திரம் தான் வாழ்க்கையை உற்சாகமாக நடத்த நமக்கு வழி காட்டக் கூடியது. இந்த 'ஏமாற்றம் அடையாத' நிலையை அடைவது முற்றும் துறந்த முனிவர்களால்கூட முடியாத காரியம் பயிற்சி இல்லாமல். ஒருவன் ஏமாறாமல் இருக்க என்ன செய்ய வேண்டும்? அந்த ஞானம் உதயமாக நானும் எத்தனையோ மரங்கள் கீழ் தவம் இருந்தேன். கடைசியில் சர்க்கார் பஸ் ஸ்டாப் ஒன்றில் எனக்கு ஞானோதயமாயிற்று.

பஸ் விவகாரத்திலிருந்தே விளக்கத்தைத் தொடங்குகிறேன். ஸ்டாப்புக்கு வந்து நாற்பத்தொன்பது நிமிஷங்கள் கழித்தே 49-ஆம் நம்பர் பஸ் கிடைத்தது! நாம் ஸ்டாப்புக்கு வந்த அடுத்த விநாடியோ, அல்லது அடுத்த நிமிஷமோ நமக்குத் தேவையான



பஸ்ஸை எதிர்பார்க்கிறோம். அது வர ஐந்து பத்து நிமிஷங்களே ஆனாலும் அது நமக்கு அரை மணி ஒரு மணி போலத் தோன்றுகிறது. இதற்கு மாறாக, நாம் பஸ்ஸைக் குறைந்தபட்சம் ஒரு மணி நேரத்துக்கு எதிர்பார்ப்பதில்லை என்ற தீர்மானத்தோடு நின்றால் அது வர அரை மணி ஆனாலும், ஐந்தே நிமிஷம்தான் காத்திருந்தது போன்ற ஒரு பிரமை ஏற்படாதா? இது எத்தகைய மகிழ்ச்சியைத் தர வல்லது பாருங்கள்!



அழகழகாக அச்சிட்ட திருமண அழைப்பிதழைத் தபாலில் அனுப்பி வைத்ததோடு அமையாமல், மனைவியுடன் வீட்டுக்கு வந்து அட்சதை கொடுத்து அழைத்து விட்டுப் போய், நடுவில் டெலிபோன் மூலம் நினைவும் ஊட்டினாரே நண்பர் என்று அவர் பெண்ணின் கல்யாணத்துக்கு ஏகப்பட்ட உபசரிப்பை எதிர்பார்த்துப் போகிறீர்கள்! உமது சக்திக்கு ஏற்ப சாமி படமோ, குத்து விளக்கோ, டேபிள் லைட்டோ, எவர்சில்வர் டபராவோ, ரவிக்கைத் துண்டோ, கட்டி வராகனோ ஓதி இடுகிறீர்கள்! உங்களைப் பார்த்து ஒரு மோ(க)னப் புன்னகை உதிர்த்ததற்கு மேல் உங்களை வாய் திறந்து வரவேற்கவோ, ஒரு வாய் சாப்பிட்டு விட்டுப் போங்கள் என்று உபசாரம் செய்யவோ அவருக்கு அவகாசம் இருப்பதில்லை. நாலு பேர் நடுவில் உங்களைக் கட்டிக் கொண்டு கூத்தாடுவார் என்றோ உங்கள் இருவர் நட்பின் பெருமையைப் பறைசாற்றுவார் என்றோ, விருந்து நடக்கும் இடத்துக்கு உங்கள் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு போய் உட்கார வைப்பார் என்றோ நினைத்தால் நீங்கள் ஏமாந்து போக வேண்டியதுதான்! "கல்யாணக் கலாட்டாவில் அவரால் நம்மை எங்கே கவனிக்க முடியப் போகிறது? நம்மை நாமே கவனித்துக் கொள்ள வேண்டியது தான்" என்று நீங்கள் தீர்மானித்து விட்டால் எத்தனை நிம்மதி? எவ்வளவு சுகம்? ஏமாற்றமோ, ஏக்கமோ அங்கே தலைநீட்ட முடியுமா?

மூக்கால் வாசிக் குடும்பங்களில் கணவனுக்கும் மனைவிக்கும் மனஸ்தாபம் வருவதற்குக் காரணம் என்ன? நல்லண்ணு





இதென்ன வேடிக்கை இந்தக் குப்பைக் கூளத்தைப் போய்ப் புகைப்படம் எடுப்பானேன்?

(16ம் பக்கம் பார்க்க.)

---

பட்டுப் புடவைக் கடையிலிருந்து அருமை மனைவி தேர்ந்தெடுத்த குயில் பார்டர் மயில் கழுத்துப் புடவைக்கு முள்ளங்கிப் பத்தை போல் முந்நூறு ரூபாய் கொட்டி அல்லது 'செக்' வெட்டிக் கொடுக்கிறீர்கள். முந்நூறு ரூபாயை 'முழுங்கிய' புடவையாயிற்றே, குறைந்த பட்சம் மூன்று வருஷங்களாவது அதைக் கட்டுவாள், இடையில் புதுப் புடவைக்குக் கோரிக்கை வராது என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். ஆறே மாதங்களில் ''ஆசி பட்டுப் புடவைக் கடைக்கு வாருங்கள்'' என்ற தாக்கீது பிறக்கிறது. ''ஆசிக்காரன் ஓசிக்குக் கொடுப்பானா?'' என்று நீங்கள் கோபமாகப் பேசிப் பயன் என்ன? ''இவ்வளவுதானா?'' என்று அவள் ஏசிக் காட்டியதும் வீட்டில் தூசி பறக்கிறது. இந்த மனக் கசப்பை எப்படித் தவிர்ப்பது? புடவையை வாங்கிக் கொடுக்கும்போதே மூன்று மாதங்களுக்குள் புதுக் கோரிக்கை முளைக்கும் என்று எதிர்பார்த்திருந்தால் குடும்பச் சச்சரவைத் தவிர்த்திருக்கலாம் அல்லவா?

மற்றொரு சாதாரண ஏமாற்றத்தைத் தவிர்க்கவும் வழி இருக்கிறது. குடும்பத்தோடு விருந்தாளிகள் வந்து விடுகிறார்கள், வைத்தியம் செய்து கொள்ள. 'மருந்தும் விருந்தும் மூன்று நாள்தானே?' மூன்றே நாட்களில் விருந்தாளிகளுக்கு "டாடா" சொல்லி விட முடியும் என்று நீங்கள் எதிர்பார்ப்பதால் அவர்கள் முப்பது நாள் 'டிகானா' போடும்போது எரிச்சல் ஏற்படுகிறது. வரும்போதே, வைத்தியம் பார்த்துக் கொள்ள வருகிறார்கள் பாவம்! ஒரு மூன்று மாத காலமாவது இருக்க மாட்டார்களா என்று தேறுதல் சொல்லிக் கொண்டால், அவர்கள் முதல் மாதத்திலேயே மூட்டை கட்டும்போது எத்தனை ஆறுதலாக இருக்கும்?

இந்தக் கைமாற்று விஷயம் எத்தனை நண்பர்களைப் பகைவர்களாக மாற்றி யிருக்கிறது? நான் கைமாற்று வாங்குவதும் உண்டு. அதே சமயத்தில் எனக்கு நிறைய நண்பர்களும் உண்டு. நண்பன் ஒருவனிடம் நூறு ரூபாய் கைமாற்றுக் கேட்கிறீர்கள். அவன், 'வருகிற வியாழக் கிழமை காலை எட்டு மணிக்கு வா, கட்டாயம் தருகிறேன்' என்று சொன்னதை நம்பி அவன் வீட்டுப் படியைச் சரியாக வியாழன் காலை 7–59க்கு மிதிக்கிறீர்கள். நண்பன் கையை அகல விரித்து விடுகிறான். ஏமாற்றத்தோடு படி இறங்கும்போது ரேடியோவிலிருந்து 'ஏமாறச் சொன்னதும் நானோ?' என்ற பாட்டு ஒலிக்கிறது.

இதற்காகவே நான் நூறு ரூபாய் தேவைப்பட்டால் நான்கைந்து ந(ண்)பர்களிடம் இருநூறு ரூபாய் கேட்டு வைப்பேன். 'இருநூறு இல்லை. நூறுதான் இருக்கிறது என்ற நண்பனிடம் அதை வாங்கிக் கொண்டு, ''ரொம்ப நன்றி! மிச்சத்தை நான் சமாளித்துக் கொள்கிறேன்'' என்றால் அவனுக்குச் சந்தோஷமே மிச்சம். ''இல்லை'' என்று கைவிரிக்கும் நண்பர்களைப் பார்த்து, ''கவலைப்படாதே! உன்பேரில் எனக்கு வருத்தம் இல்லை'' என்று நான் சொல்லும்போது அவர்கள் படும் சந்தோஷம்தான் எங்கள் நட்பின் அச்சாணி.

சினிமா, நாடகம் பார்க்கப் போகும்போது நான் ஒன்றும் அதிகமாக எதிர்பார்த்துப் போவதே யில்லை. விளம்பரங்கள் கோஷமிடும் 'சத்தான கதை', 'முத்தான வசனம்', 'சுவையான பாடல்', 'துடிப்பான நடிப்பு' 'எடுப்பான டைரக்ஷன்' எதையுமே நான் நம்புவதில்லை. இதையெல்லாம் நம்புகிறவர்கள் பிரமாதமாக எதிர்பார்த்து, ஏமாந்து பார்த்த நாடகத்தையோ திரைப் படத்தையோ திட்டோ திட்டு என்று திட்டுவார்கள்! நானோ எதிர்பார்க்காமல் போவதால் காட்சிகளில் தென்படும் ஒருசில நயங்களே என்னை மகிழ்வித்து விடுகின்றன.

தமிழ் எழுத்தாளர்களின் படைப்புக்களைப் படிக்கும்போது எனது நண்பர் ஒருவருக்கு டால்ஸ்டாய், ஷேக்ஸ்பியர், மாம், காஃகா, ஸ்டீபன்ஸன், ஹாஸ்லிட், வால்மீகி, வர்ஜில், ஹோமர், கம்பன், செகாவ், மாபஸான், காளிதாஸன் போன்றோரின் அளவுகோல்தான் நினைவுக்கு வரும். இதன் விளைவாகத் தமிழ் இலக்கியம் தரம் குறைந்ததாகவே அவர் கண்ணுக்குப் படும். அதைச் சொல்லியும் விட்டு எழுத்தாளர்களின் கோபதாபத்துக்குப் பாத்திரமாகி விடுவார்.. நானோ யாருடைய எழுத்தைப் படிக்கும் முன்பும் அவ்வளவு உயர்வாக அவர்களால் எழுத முடியும் என்பதை எதிர்பார்ப்பதே இல்லை. இந்தப் பரிபக்குவ நிலையில், நான் எதிர்பாராமல், கதை, கட்டுக்கோப்பு, பாத்திரப் படைப்பு, உத்தி முதலியனவற்றில் காணப்படும் அற்ப நயங்களும் எனக்கு மகிழ்ச்சியளிக்கப் போதுமானதாகி விடுகின்றன!

[பாரதி விழா பற்றிய கட்டுரை அல்ல இது: பாரதி விழா நடக்கும் போது தோன்றிய சில சிந்தனைகளின் தொகுப்பு.]



# விழாவில் விளைந்தவை

கவி அரங்கில் முதலமைச்சர் தலைமை உரை

★

துணைவேந்தர் பரிசு வழங்குகிறார்



மத்திய அமைச்சர் திரு வி. கே. ஆர். வி. ராவ் அவர்களும் சென்னை பல்கலைக் கழக துணை வேந்தர் சுந்தரவடிவேலு அவர்களும் பாரதி பாடல்கள் பாட திட்டத்தில் இடம் பெறவில்லையே என்று ரொம்ப வருத்தப்பட்டார்கள்; உடனடியாக ஆவன செய்ய வேண்டும் என்றார்கள்.

''ஐயா! தயவுசெய்து பள்ளிப் பிள்ளைகளுக்குப் பாரதியின் பேரில் வெறுப்பை ஏற்படுத்தி விடாதீர்கள்!'' என்றுதான் கேட்டுக் கொள்ளத் தோன்றியது.

''பராசக்தியிடம் பாரதி என்னென்ன வரங்களை எதற்காகக் கேட்டார்?'' என்ற கேள்விக்கு விடையை உருப் போட்டுக் கொண்டு போய்ப் பரீட்சையில் எழுதிவிட்டு வருவதைவிடப் பாரதிக்கு நம் குழந்தைகள் செய்யக் கூடிய அபசாரம் வேறென்ன இருக்க முடியும்?

பள்ளிப் பிள்ளைகளைச் சுற்றுலா அழைத்துப் போகிறார்களே, அப்போது உபாத்தியாயர் ஒரு வரியைப் பாட, சிறுவர் சிறுமியர் அதைத் திருப்பிச் சொல்லட்டும். பள்ளி நேரம் முடிந்த பிறகு மாலை நேரத்தில் மரத்தடியில் கூடிப் பாரதி பாடல்களைக் கோஷ்டி கானமாகக் குழந்தைகள் விரும்பிப் பாடட்டும். வற்புறுத்த வேண்டாம். பரீட்சையும் வேண்டாம். ஓர் ஆண்டில் ஒரு பாடலைப் பாலர் பொருளுணர்ந்து பாடக் கற்றுக் கொண்டால் பள்ளிப் படிப்பு முடியு முன்னர் பத்துப் பாடல்களைப் பயின்றிருப்பார்கள். அதுவே போதும், பாரதியிடம் அவர்களுக்கு ஈடுபாட்டை ஏற்படுத்த. அப்புறம் இருக்கவே இருக்கிறது பாரதி புத்தகங்களும் நூலகங்களும்.

*　　*　　*

செப்டம்பர் 11ந் தேதி காலை திரு நா. மகாலிங்கம் கடற்கரைச் சாலையில் உள்ள பாரதி சிலைக்கு மாலை அணிவித்தார். அத்துடன் விழா நடந்த வாணி மகால் எதிரே உள்ள என். எஸ். கே. சிலைக்கு மறக்காமல் புதிய மலர் மாலை அணிவித்திருந்தது மன மகிழ்ச்சியை அளித்தது. சென்னையில் நிறுவப்பட்டுள்ள பல சிலைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை இப்படியே ஒவ்வொரு நிறுவனம் அல்லது அமைப்பினிடம் ஒப்படைத்தால் சிலைகள் அழுது வடியாமலும் அழுக்கு சேராமலும் வாடிக் கருகிய மலர் மாலைகளைச் சுமக்காமலும் இருக்கும்.

*　　*　　*

11ந் தேதி இரவு அடையாறு சகோதரிகள் துறுதுறுப்புடன் அழகாக நடனமாடினார்கள். இது போன்ற கலை ஆர்வம் மிக்க குழந்தைகளைச் சென்னை நகர சபாக்கள் இன்னும் அதிகமாகவே பயன்படுத்திக் கொள்ளலாமே! நல்ல கலைக்கு ஆதரவில்லாமல் போனால் விரக்தியும் வேண்டாத விளைவுகளும்

## அறிவுச் சோலை

மின்மினிப் பூச்சி பறக்கும்போது தான் பளபளக்கிறது. அதுபோல, சோம்பிக்கிடக்காமல் இயங்கும் போதுதான் மனிதன் பிரகாசிக்கிறான். —பெய்லி

பலவீனர்களின் பாதையில் தடையாக நிற்கும் கற்பாறைகள், பலசாலிகளின் பாதையில் படிக்கட்டாக அமைகின்றன. — கார்லைல்

அனுப்பியவர்: மூனூர் பி. எம். ரஹீம்

ஏற்படலாம் அல்லவா? அடையாறு சகோதரிகளுக்கு அப்படியெல்லாம் ஒன்றும் நேராமல் தூய பரதக் கலையில் அவர்கள் மேன் மேலும் சிறக்கட்டும்.

* * *

பாரதியார் சங்கத்தில் ஆக்கூர் அனந்தாச்சாரியார், சங்கு சுப்பிரமணியம், பாரதிதாசன் ஆகியோரது படத் திறப்பு விழா நடத்தி விட்டார்கள். ஆனால் திறந்து வைக்கப்பட்ட படங்களை எங்கே மாட்டுவது? இந்தப் பிரச்னைக்கு முடிவு காணத்தானோ என்னவோ முதலமைச்சரிடம் மனு சமர்ப்பித்து விட்டார்கள், 'காணி நிலம் வேண்டும் பாரதி சங்கத்துக்கு; அதில் ஒரு கட்டடமும் வேண்டும்' என்று. பாரதி சங்கத்துக்கு இவை கிடைத்தால் ரொம்ப ரொம்ப மகிழ்ச்சி. அப்படிக் கிடைக்கும் வரை படங்களில் புழுதி அடையாமல் திரு தி. க. ஷண்முகம் பார்த்துக் கொள்வார் என்பதும் உறுதி. இன்னொரு யோசனை: படங்களில் உள்ள நாயகர்களிடம் மிகவும் மதிப்பு வைத்துள்ளவர்களிடம் அப்படங்களை ஒப்படைத்து, கூடுமானால் பொது இடங்களில் மாட்டச் செய்து பாதுகாத்து வரச் சொல்லலாம். பாரதி சங்கத்தின் அன்பளிப்பாகவேகூடக் கொடுத்து விடலாம்.

* * *

கவி அரங்கில் கலந்து கொண்ட ஒருவர் இருபதாம் நூற்றாண்டில் பாரதியைப்போன்ற இன்னொரு கவி இந்த உலகில் வேறு எந்த நாட்டிலுமே தோன்றியதில்லை என்று ஆணித்தரமாகக் கவிதா ரூபத்தில் முழக்கியபோது 'எத்தனை மொழிகளில் எழுதப்பட்ட எத்தனை பேர்களுடைய எத்தனை கவிதைகளைப் படித்துவிட்டு இப்படி இவர் அடித்துரைக்கிறார்?' என்ற எண்ணம் எழுந்தது. பக்கத்தில் அமர்ந்திருந்த திரு ந. சஞ்சீவி இதே எண்ணத்தைப் பிரதிபலித்து விட்டுச் சொன்னார்: ''கவிதா அரங்கில் படிக்கப்படவிருக்கும் கவிதைகளின் நகல் முன்கூட்டியே விழா அமைப்பாளர்களுக்குக் கிடைக்க வேண்டும். அதை 'எடிட்' செய்யும் உரிமை அவர்களுக்கு இருக்க வேண்டும்'' என்று. இதை முழு மனத்துடன் ஆமோதிக்கும்போதே, வேறு ஒரு கவிஞர், ''அடி! உதை!'' என்றெல்லாம் 'கவிதை' படித்தார். அப்போதுதான் எனக்குத் தரப்பட்ட காந்தி வட்டத்தின் சமீபத்திய இதழ் ஒன்றைப் பிரித்தேன். ''கவிதைப் பண்பு'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை! காதில் விழுந்ததோ ''அடி உதை!'' கவிதை! விசனத்துடன் நிமிர்ந்தபோது விழா அமைப்பாளர்கள் ''தூற்றுதல் தவிர்'' என்று கொட்டை கொட்டையாக எழுதித் தொங்க விட்டிருந்த அட்டை கண்ணைப் பறித்தது!

* * *

பாரதி சொற்பொழிவுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. நீதிபதிகளாய் இருந்தோர், பேசிய குழந்தைகள் பொருளுணர்ந்து பேசினார்களா என்பதைச் சோதித்துப் பார்த்தார்களா, தெரியாது. அதிலும் கவனம் செலுத்தி யிருந்தால் பரிசு பெற்றவர்கள் பாராட்டுக்குரியவர்களே. மாறாக, கூறும் வார்த்தைகளின் பொருள் உணரும் மனப் பக்குவமோ வயதோ அடையாமல் யாரோ எழுதிக் கொடுத்ததை மனனம் செய்து திருக மெட்டில் ஒப்பித்திருந்தால் அதற்குப் பரிசு தருவது அவர்களுக்கு நாம் நன்மை செய்ததாகாது.

* * *

ஸ்ரீ வி. கே. ஆர். வி. ராவ் 'பஞ்சலி சபதத்தை'யும், 'ஆத்திக்குடி'யையும் வைத்துக் கொண்டு வெளுத்து வாங்கினார். என்றாலும் வேற்று மொழிக்காரர் ஒருவர் தமிழார்வம் கொண்டு தமிழில் பேச முன்வந்ததை, அதிலும் பாரதியைப் **படித்துவிட்டுப்** பேச வந்ததை எல்லாரும் வரவேற்கத்தான் செய்தார்கள். ''குழந்தைகளிடம்தான் மழலை உண்டு என நினைத்திருந்தோம்; பெரியோரிடத்திலும் அதைக் காணலாம் என்பதை இன்றுணர்ந்தோம்'' என்றார் நன்றி கூறிய ஸ்ரீமதி எம். எஸ். கமலா. ரொம்ப சரி, ஆனால் நம்மவரே — தமிழரே — ''பல்கலைக் கலைத் துணைவேந்தர்'' என்று திரு சுந்தரவடிவேலுவைக் குறிப்பிட்டதையும் மழலை என்பதா?

* * *

''வகிக்கும் பதவி காரணமாகப் பம்பரமாய்ச் சுற்றுகிறேன். ஆனால் பம்பரமும் ஓய்ந்து விழும். அப்படித்தான் நானும் களைத்துப் போன நிலையில் புத்துணர்ச்சி பெற இவ்விழாவில் கலந்து கொள்ள வந்திருக்கிறேன்'' என்று கவியரங்குக்குத் தலைமை வகித்த முதலமைச்சர் மு. கருணாநிதி கவிதையாகவே சொற்பெருக்காற்றினார். அவருடைய தலைமையுரைக் கவிதையையும் கவிஞர்களை அறிமுகப்படுத்தும் முகமாக அவர் ஆற்றிய கவிதை உரைகளையும் கேட்ட ரசிகர்களுக்கு, ''இவரை இன்னும் அதிகமாக வேலை வாங்க வேண்டும்; அப்போதுதானே இவர் அடிக்கடி களைப்புற்று, புத்துணர்ச்சி பெற இப்படி இலக்கிய விழாக்களில் கலந்து கொள்ள வருவார்; நமக்கும் நயமான கவிதை விருந்து கிடைக்கும்'' என்று சுயநல எண்ணம் பிறந்தது.

— குட்டி கிருஷ்ணன்



# பக்கத்து வீட்டுப் பிரமுகர்

**[முன்பு பக்கத்து வீட்டில் வசித்தவரும் எப்போதும் தொழில் துறையில் தபேலாவும் கையுமாய்ப் பக்கத்திலேயே இருப்பவருமான ஹனுமந்தப்பா திரைப் பட இசை அமைப்பாளரான எம். எஸ். [விசுவநாதனைப் பற்றிக் கூறுகிறார்:]**

அவர் நெற்றியைக் கவனிச்சீங்களா? எப்போதும் விபூதி குங்குமம் பளிச்சுன்னு தெரியும். இது அவருக்குச் சின்ன வயசிலிருந்தே வந்த பழக்கம். விபூதி குங்குமம் இல்லாமே வாசப்படி தாண்டி வெளியே போனால் அவர் தாயாருக்கு ரொம்பக் கோபம் வருமாம்.

ஆனால் அவர் முகம் பளிச்சென்று இருக்கிற நாள் அநேகமாக வாரத்தில் ஒரு நாளாகத்தான் இருக்கும். ஞாயிற்றுக் கிழமைகளில்தான் அவருக்கு முக க்ஷவரம் செய்து கொள்ள நேரம் கிடைக்கிறது. மற்ற நாட்களில்தான் எழுந்திருந்த உடனேயே, ரிஹர்சல், ரிக்கார்டிங் என்று ஓட வேண்டியிருக்கிறதே! வீடு திரும்ப இரவில் மணி பத்தும் ஆகும்! பதினொன்றும் ஆகும்! அப்புறம் கையில் கத்தியை எடுக்க ஏது நேரம்? இவரும் அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. எடுத்த வேலையை முடிக்கணும். அதில் தான் தீவிரம்! கோவிலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் போதுகூட இசை அமைத்தல் சம்பந்தப்பட்ட அழைப்பு வந்துவிட்டால், நேரே தொழிலைக் கவனிக்கப் புறப்படும் சுபாவம். உழைப்பே தெய்வம் என்ற உறுதியான கொள்கை உடையவர்.

முருக பக்தர். உற்சாகத்திலும், சோர்விலும் இவர் உதடுகள் உதிர்ப்பது முருக நாமம்தான். ஓய்வு கிடைத்தால் உடனே பழனிக்குப் புறப்படுவார்; திருப்பதிக்கும் போய் வருவார்.

இவர் நாடகத்திலே நடிச்சிருக்கிறார். ஆமாம்! ஏழு வயசிலேயே லோகிதாசனாக நடித்திருக்கிறார். எங்கே தெரியுமோ? ஜெயிலுக்குள்ளே!

இவர் தந்தையைச் சிறு வயதிலேயே இழந்ததன் காரணமாக, தாத்தா மேற்பார்வையில் வளர்ந்துக்கிட்டு இருந்தார். அந்தத் தாத்தா ஜெயில் வார்டர். பேரப் பிள்ளையையும் ஒரு நாள் லோகிதாசனாக மேடையில் ஏற்றி விட்டார்.

ரொம்ப ஏழைக் குடும்பம். மலபாரில் இவர்கள் ஊரில் இருந்த நீலகண்ட பாகவதர் என்பவர், மாசம் இரண்டு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு பல பேருக்குச் சங்கீதம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். இவருக்கு அந்தச் சின்ன வயசிலேயே சங்கீதம் கற்றுக் கொள்ள ஆசை. ஆனால் மாசம் இரண்டு ரூபாய் கொடுக்கக் குடும்பத்தில் வசதி இல்லை. அதற்காக அந்தப் பாகவதர் வீட்டில் சின்னச் சின்ன வேலைகளைச் செய்து கொண்டு அவர் மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதைக் கவனிக்க ஆரம்பித்தார். இதைப் பாகவதரும் கவனித்தார். பையன் மனத்தையும் அவன் வீட்டு நிலையையும் புரிந்து கொண்டார். இலவசமாக சிட்சை சொல்லிக் கொடுத்தார்.

தேயிலை விற்பனை செய்யும் நிறுவனத்தைச் சேர்ந்த ஓர் உயர் உத்தியோகஸ்தர் சமீபத்தில் ஒரு நாள் இவரைத் தேடி வந்தார். 'ஐயா! எனக்கு உம்முடைய திரைப் பட இசை ஏதும் பிடிக்காது. ஆனால் என் வீட்டில் என் குழந்தைகளுக்கெல்லாம் உம்முடைய இசையில் ஒரே மோகம். நான் என்ன கடிந்து சொன்னாலும் ரேடியோவை 'ஆஃப்' பண்ண மாட்டார்கள். ஆனால் சில தினங்களுக்கு முன்னாலே 'லட்சுமி கல்யாணம்' என்கிற படத்திலே நீர் இசை அமைத்திருக்கும், 'ராமன் — எத்தனை ராமனடி' என்ற பாடலைக் கேட்டு மெய்ம்மறந்து போனேன். இதோ பத்தாயிரம் ரூபாய் இருக்கு. உமக்குப் பிடித்தமான இடத்தில் ஒரு ராமன் கோயில் கட்டும்'' என்றாரே பார்க்கலாம்!

விசுவநாதன் ஒரு கணம் திகைத்துப் போனார். உடனே சமாளித்துக் கொண்டு



ஹனுமந்தப்பா — விசுவநாதன்

கரம் கூப்பி, 'ஐயா! உணர்ச்சிக்கு மிக்க நன்றி! இந்த ரூபாயைத் திருப்பதி உண்டியலில் கொண்டு போய்ப் போடுங்கள்' என்று சொல்லி அனுப்பி வைத்தார்.

இவருக்கு ரொம்ப இளகிய மனசு! கடுமை உணர்ச்சி என்பது இவர் முகத்திலே பரவி நான் பார்த்த நினைவே இல்லை. அதிகாலையிலேயே இவரைச் சந்திக்க இசைத் துறை சம்பந்தப்பட்டவர்கள், உதவி கேட்டு வருபவர்கள், இசைப்பணியில் சந்தர்ப்பம் கேட்டு வருபவர்கள் என்று எத்தனையோ பேர் வருவார்கள். கொஞ்சமாகப் பேசினாலும் சுமுகமாக, சிடுசிடுக்காமல் எல்லோருடனும் பேசி அவர்களை அனுப்பி வைத்து விட்டுத்தான் தம் வேலையில் ஈடுபடுவார்.

இவருடைய இரக்க குணத்தை மாறான முறைகளில் பயன்படுத்திக் கொள்பவர்களும் உண்டு. இவருக்கு எப்போதோ ஒரு சமயத்தில் அறிமுகமான நபர் ஒருவர் திடீரென்று இவரிடம் வந்தார். மனைவி குழந்தைகளுக்கு உடல் நலம் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் பண உதவி வேண்டுமென்றும் கெஞ்சினார். இவரும் உதவி செய்து அனுப்பினார்.

ஆனால் மறுநாளே முதல் நாள் வந்து நின்ற நபரின் மனைவி இவர் வீட்டுக்கு வந்தாள். கணவன் வீட்டை விட்டு ஓடிப்போய் மூன்று மாதங்களாகின்றதென்றும், குடும்பம் நடத்த ஏதாவது உதவி செய்ய வேண்டுமென்று சொன்னாள். இவள் சொல்வது நிஜம் என்று தெரிந்து கொண்டு, அவளுக்காக அவள் கணவனின் பொய்யை மறந்து அவளுக்கும் உதவி செய்துதான் அனுப்பினார்.

முன்பெல்லாம் சில ஞாயிற்றுக்கிழமைகளில் குடும்பத்தினரை அழைத்துக் கொண்டு எங்காவது 'பிக்னிக்' போவார். இப்போது அதற்கும் அவகாசம் இல்லை.

ஆகார வகைகளில் இவருக்கு வேண்டியது வேண்டாதது என்று ஒன்றும் கிடையாது. பசிக்கு உணவு வேண்டும். அவ்வளவுதான். ராகங்களில் இவருக்குத் திலங், சுபபந்துவராளி, சிந்துபைரவி முதலியவை பிடிக்கும்.

நூற்றுக்கணக்கான படங்களுக்கு இவர் இசை அமைத்து அனுபவம் பெற்றவர்தான். ஆனாலும் ஒவ்வொரு படத்திலும், இந்தப் பணியைச் செய்ய ஆரம்பிக்கும்போது அப்போதுதான் இந்தத் துறைக்குப் புதிதாக அடியெடுத்து வைத்திருப்பவர் போல் பய பக்தியுடன் ஹார்மோனியத்தின் 'ரீட்ஸ்'களை அமுக்கி 'ட்யூன்' இசைப்பார்.

மனைவியின் மனம் நோகாமல் நடக்கப் பழகியிருக்கிறார். உதாரணமாக இவர் ஒரு திரைப்பட விழா சம்பந்தமாக ரஷ்யாவுக்குப் போக வேண்டியிருந்தது. புறப்பட வேண்டிய தினம் வெள்ளிக்கிழமையாக அமைந்தது. இவர் மனைவிக்குத் தம் கணவர் வெள்ளிக்கிழமையன்று வீட்டை விட்டுப் புறப்படுவதில் அவ்வளவாக விருப்பமில்லை. இவர் பேசாமல் வியாழக் கிழமை மாலையிலேயே உட்லண்ட்ஸ் ஹோட்டலுக்கு ஜாகை மாறி விட்டார். அங்கே இருந்துதான் விமான நிலையத்துக்குக் கிளம்பினார்.

மனிதர் ரொம்ப 'ஸிம்பிள்'. ஆடம்பரம், ஜபர்தஸ்து என்னவென்றே தெரியாது.

அரசியல் விஷயங்களிலே ரொம்ப அப்பாவி! தொழில் முறையில் வெவ்வேறு கட்சிகளைச் சேர்ந்த புரொடியூசர்களுடன் பழகினாலும் இவர் அவர்களின் அரசியல் சிந்தனைகளில் கலந்து கொள்வதில்லை.

பேட்டி: **கோமதி சுவாமிநாதன்**

---

சந்திரனில் அடியெடுத்து வைத்த விண்வெளி வீரர்களுக்கு ஹௌஸ்டன் நகரில் வரவேற்பு அளிக்கப்பட்டபோது உயரமான கட்டிடங்களின் மீதிருந்து - புஷ்பமாரி பொழிதல் என்பார்களே அப்படி - காகித நாடாமாரி பொழிந்தார்கள் அமெரிக்கப் பொதுமக்கள். ஆர்ம்ஸ்ட்ராங் முதல் படத்தில் மக்களின் வரவேற்பை ஏற்றுக் கரம் அசைக்கிறார். இரண்டாவது படத்தில் மழையெனப் பொழிந்த காகித நாடாக்கள் அவரை முழுமையாக மறைந்து விட்டன. மூன்றாவது படத்தில் அக்குவியலிலிருந்து விடுபட்டு எழுகிறார்.



அத்தியாயம் ஐம்பத்தொன்று

## சுழிக் காற்று

காற்று அசையவில்லை; கடல் ஆடவில்லை; கப்பலும் நகரவில்லை.

அலையற்ற அமைதியான ஏரியைப்போல் காணப்பட்ட கடலை நோக்கிய வண்ணம் வந்தியத்தேவன் சிறிது நேரம் சும்மா யிருந்தான். அவன் உள்ளத்தில் மட்டும் பேரலைகள் எழுந்து விழுந்தன.

திடீரென்று இரு கரங்களையும் கடலை நோக்கி நீட்டிக் கொண்டு 'ஓம் ஹ்ரீம் ஹ்ராம் வஷட்!' என்று கூவினான்.

மறுகணத்தில் கையில் கத்தியை எடுத்துக் கொண்டான். சக்கராகாரமாக இரண்டு தடவை சுழற்றினான்.

''ஆம், ஆம்! சமுத்திர ராஜன் பலி கேட்கிறான்! இரட்டைப் பலி கேட்கிறான். தூங்குகிறவர்களைத் தாக்கிக் கொல்லும் இரண்டு சூரர்களைப் பலியாகக் கொடு என்று கேட்கிறான்! பலி

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

கொடுத்தால்தான் மேலே இந்த மரக்கலத்தைப் போக விடுவேன் என்கிறான். எங்கே! உடனே இப்படி இரண்டுபேரும் வந்து தலையை நீட்டுங்கள்! சீக்கிரம்! சீக்கிரம்!'' என்று ஆர்ப்பரித்தான்.

ரவிதாஸன் வந்தியத்தேவனை வியப்புடன் உற்றுப் பார்த்தான். 'ஹா! ஹா! ஹா!' என்று மறுபடியும் பேய் சிரிப்பது போல் சிரித்தான்!

''தம்பி! இது என்ன விளையாட்டு?'' என்றான்.

''அண்ணன்மார்களே! இது விளையாட்டு அல்ல; வினை! சற்று முன் நான் கீழே கட்டப்பட்டுக் கிடந்த போது சிறிது தூங்கிப் போனேன். அப்போது கனவு கண்டேன். கடலையும் வானத்தையும் ஒன்றுசேர்த்த பூதம் போன்ற நீல நிற உருவம் ஒன்று என் முன்னால் நின்றது. ஏதோ சொல்லியது. அது என்னவென்று அப்போது புரியவில்லை; இப்போது புரிந்தது! மந்திர தந்திரங்களில் தேர்ந்த காளி பக்தர்கள் இரண்டு பேருடைய உயிர்ப் பலி வேண்டும் என்று சமுத்திர ராஜன் கோருகிறான். கொடுக்காவிட்டால் இந்தக் கப்பலை மேலே போக விட முடியாது என்றும் சொல்லுகிறான். ஆறு முரட்டு அராபியர்களின் உயிர்ப் பலியினால் அவன் திருப்தி அடையவில்லை. வாருங்கள்! சீக்கிரம்!''

என்று கூறி வந்தியத்தேவன் கையில் பிடித்த கத்தியை வானை நோக்கி உயர்த்தினான்.

ரவிதாஸனும் தேவராளனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

ரவிதாஸன், "தம்பி! கதை கட்டுவதில் உன்னைப் போன்ற கெட்டிக்காரனை நான் பார்த்ததேயில்லை!" என்றான்.

வந்தியத்தேவன், "ஓ! நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? கதை கட்டுகிறேனா? சமுத்திர ராஜனே! இந்த மூடர்களுக்கு நீயே மறுமொழி சொல்!" என்று கூவினான்.

அவன் அவ்வாறு கூவிய குரல் சமுத்திர ராஜனுடைய காதிலே கேட்டது போலும். அதற்கு மறுமொழி கூறவும் சமுத்திரராஜன் விரும்பினான் போலும்.

கடலில் அப்போது ஒரு விந்தையான காட்சி தென்பட்டது. கண்ணுக்கெட்டிய தூரம் நாலு திசையிலும் கடல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. சிறிய சிறிய சிறிய சின்னஞ்சிறிய அலைகள் ஆயிரமாயிரம் எழுந்து விழுந்தன. இது ஒரு நிமிஷ நேரந்தான். அடுத்த நிமிஷத்தில் அவ்வளவு அலைகளும் வெள்ளிய நுரையின் நுண் துளிகளாக மாறின. விரிந்து பரந்த கடற் பிரதேசமெங்கும் அந்த வெண் நுரைத் துளிகள் துள்ளி விளையாடின. விசாலமான பசும்புல் தரையில் கோடி கோடி கோடி தும்பை மலர்கள் இளங் காற்றில் உருண்டு உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தால் எப்படி இருக்கும்! அவ்வாறு இருந்தது அச்சமயம் கடலின் காட்சி!

ஆம்; இலேசான இளங்காற்று, — இனிய குளிர்ந்த காற்று, — அந்த மரக்கலத்தையும் ஒரு கணம் தழுவிக் கொண்டு அப்பால் சென்றது. கப்பல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. வெப்பத்தினால் வறண்டிருந்த வந்தியத்தேவனுடைய உடலும் சிலிர்த்தது.

ரவிதாஸனும் தேவராளனும் 'ஹா ஹா ஹா!' என்று சிரித்தார்கள்!

"தம்பி! சமுத்திர ராஜனே உன் கேள்விக்கு மறுமொழி சொல்லி விட்டான்! நாங்கள் எங்களைப் பலி கொடுக்க ஆயத்தமாக வேண்டியது தான்!" என்றான் ரவிதாஸன்.

வந்தியத் தேவனுடைய உள்ளம் கலக்கமுற்றது. கடலில் ஏற்பட்ட அந்தச் சிறு சிலிர்ப்பும் உடனே ஏற்பட்ட மாறுதலும் அவனைத் திகைக்கச் செய்திருந்தன.

ஆகா! இது என்ன? அவ்வளவு ஆயிரமாயிரம் சிறிய அலைகளும் கோடானு கோடி கோடி வெண் நுரைத் துளிகளும் எங்கே போயின? மாயமாய்ப் போய் விட்டனவே? மறுபடியும் கடல் அமைதியுற்றுப் பச்சை நிறத் தகடு போல் காணப்படுகிறதே! சற்று முன் கண்ட காட்சி உண்மையாக நிகழ்ந்ததா? அல்லது வெறும் பிரமையா? ஒருவேளை இந்த மந்திரவாதி ரவிதாஸனின் மந்திர சக்தியாகத்தான் இருக்குமோ!

"அதோ பார்த்தாயா? தம்பி! கடல் கூறியதை வானமும் ஆமோதிக்கிறது!" என்று ரவிதாஸன் தென்மேற்குத் திசையைச் சுட்டிக் காட்டினான்.

அவன் காட்டிய திசையில்,—பச்சைக் கடலும் நீல வானமும் ஒன்று சேரும் மூலையிலே, — ஒரு சின்னஞ் சிறு கரிய மேகத் துணுக்கு ஒரு சாண் உயரம் எழுந்து நின்றது. அந்தக் கரிய மேகத் துணுக்கின் உச்சிப் பகுதி செக்கச் செவேலென்று இரத்தச் சிவப்பு வர்ணத்துடன் திகழ்ந்தது.

சாதாரண நாட்களில் இந்தத் தோற்றத்தை வந்தியத் தேவன் கவனித்திருக்கவே மாட்டான். கடலும் வானும் சேரும் மூலையில் மேகத் திரள் காணப்படுவது ஓர் ஆச்சரியமா, என்ன? இல்லைதான்! ஆயினும் அந்தச் சிறிய தோற்றமும் அந்த வேளையில் நம் கதாநாயகனுடைய மனத்தைச் சிறிது கலக்கி விட்டது.

மறு கணத்தில் வந்தியத்தேவன் சமாளித்துக் கொண்டான். 'இந்த மந்திரவாதியின் வலையில் நாம் விழுந்து விடக்கூடாது' என்று மனத்துக்குள் உறுதி செய்து கொண்டான்.

ரவிதாஸனை ஒரு தடவையும் தேவராளனை ஒரு தடவையும் விழித்துப் பார்த்து, "அப்படியானால் ஏன் தாமதம்? வாருங்கள்!" என்று சொல்லிக் கத்தியை ஓங்கி வீசினான்.



''அப்பனே! நாங்கள் பலியாவதற்கு முன்னால் எங்கள் குல தெய்வத்தைப் பிரார்த்தனை செய்ய விரும்புகிறோம். அரை நாழிகை அவகாசம் கொடு!'' என்றான் ரவிதாஸன்.

''சரி! பிரார்த்தனையைச் செலுத்தி விட்டு உடனே வாருங்கள். உங்கள் தந்திர மந்திரம் ஒன்றையும் என்னிடம் காட்டவேண்டாம். காட்டினாலும் பலிக்காது!'' என்றான் வந்தியத்தேவன்.

''இதோ வந்து விடுகிறோம். எங்களுடைய ஆயுதத்தையும் இங்கேயே போட்டு விட்டுப் போகிறோம், பார்!'' என்றான் ரவிதாஸன்.

அப்படியே இருவரும் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு அம்மரக்கலத்தின் இன்னொரு புறத்துக்குச் சென்றார்கள்.

அந்த அரை நாழிகை அச்சமயம் வந்தியத் தேவனுக்கும் தேவையாயிருந்தது. கடலிலும் வானிலும் ஏற்பட்ட தோற்றங்களினால் விளக்க மில்லாத கலக்கம் அவனுடைய உள்ளத்தில் எழுந்து அவன் உடம்பையும் சிறிது தளரச் செய்திருந்தது. அவசியம் நேர்ந்தால் ஒரே கத்தி வீச்சில் அந்தக்

கிராதகர்கள் இருவரையும் தீர்த்துக் கட்ட அவன் முடிவு செய்திருந்தான். ஆனால் அதற்கு வேண்டிய பலம் தன் கையில் அச்சமயம் இருக்குமா என்ற ஐயம் ஏற்பட்டிருந்தது. ஆகையால் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு கையிலும் பூரண பலத்தை வருவித்துக் கொள்ளச் சிறிது அவகாசம் அவனுக்கு வேண்டியிருந்தது.

தென்மேற்கு மூலையில் அவன் கவனம் மறுபடியும் தற்செயலாகச் சென்றது. சற்று முன்னால் சாண் உயரம் தோன்றிய மேகத் திரள் இப்போது முழ உயரமாக வளர்ந்திருந்தது. உச்சியில் இரத்தச் சிவப்பு நிறம் சிறிது மங்கியிருந்தது.

மேகத் திரள் மேலும் மேலும் உயர்ந்து வருவதாகத் தோன்றியது.

முதல் சிறு சிலிர்ப்புடன் நின்றுவிட்டிருந்த காற்று மறுபடியும் நிதானமாக வரத் தொடங்கியது. கடலிலும் கலக்கம் காணப்பட்டது. சிறிய சிறிய அலைகள் நடனமாடத் தொடங்கியிருந்தன.

மேகத் திரள் மேலும் மேலும் வானில் உயர்ந்து வந்து கொண்டிருந்தது.

காற்றின் வேகமும் அதிகரித்து வருவதாகத் தோன்றியது. கப்பல் இலேசாக அசைய ஆரம்பித்தது.

காற்றின் ரீங்காரத்துக்கும் அலைகளின் சலசலப்புக்கும் இடையில், — அது என்ன சத்தம் ? கடலில் ஏதோ விழுந்தது போல் சத்தம் கேட்டதே !

வந்தியத்தேவன் பின்பக்கம் திரும்பிப் பார்த்தான். ரவிதாஸனையும் தேவராளனையும் காணவில்லை. அதில் அதிசயமும் இல்லை. கப்பலின் மறு பக்கத்திலே அவர்கள் இருப்பார்கள். பாய்மரங்களும் கப்பலின் மைய மேடையும் அவர்களை மறைத்திருக்கின்றன.

ஆ! இது என்ன? துடுப்புகளினால் படகு தள்ளும் சத்தம் அல்லவா கேட்கிறது ?....

வந்தியத்தேவன் உடனே ஓடிச் சென்று கப்பலின் மறுபக்கத்தை அடைந்தான். அவன் அங்கே கண்ட காட்சி உண்மையில் அவனைத் திடுக்கிடச் செய்தது. அப்படி நடக்கக்கூடும் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. தன்னைச் சமரசப்படுத்துவதற்காக அவர்கள் கலந்து யோசனை செய்யப் போயிருக்கிறார்கள் என்றே நினைத்தான். ஆனால் அவர்கள் கப்பலின் மறு பக்கத்தில் சேர்த்துக் கட்டியிருந்த சிறு படகை அறுத்து விட்டுக் கடலிலே இறக்கி அதில் ஏறிக் கொண்டிருந்தார்கள். துடுப்பு வலித்துப் படகைத் தள்ளவும் ஆரம்பித்து விட்டார்கள் !

வந்தியத்தேவனைப் பார்த்ததும் ரவிதாஸன் சிரித்தான். "தம்பி! சமுத்திரராஜனுக்குப் பலியாக எங்களுக்கு விருப்பம் இல்லை. தெரிகிறதா?" என்றான்.

வந்தியத்தேவன் ஒரு நொடியில் தன் நிலையை உணர்ந்தான். அந்தப் பெரிய மரக்கலத்தில் தன்னைத் தனியாக விட்டு விட்டு அவர்கள் போகிறார்கள். கப்பல் ஓட்டும் கலையைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. கடலில் எந்த இடத்தில் கப்பல் நிற்கிறது, எந்தத் திசையாகப் போனால் எங்கே போய்ச் சேரலாம் என்பதொன்றும் அவனுக்குத் தெரியாது. அப்படிப்பட்ட அநாதரவான நிலையில் அவனை விட்டு விட்டு அவர்கள் போகிறார்கள்.

"பாவிகளே! என்னையும் அழைத்துக் கொண்டு போகக் கூடாதா?" என்று கேட்டான்.

"தம்பி! சமுத்திரராஜனுக்கு ஒரு பலிகூட இல்லாமற் போகலாமா ?" என்றான் ரவிதாஸன்.

படகு கப்பலைவிட்டு அகன்று போய்க் கொண்டேயிருந்தது.

கடலில் குதித்துப் படகைப் போய்ப் பிடிக்கலாமா என்று வந்தியத்தேவன் ஒரு கணம் நினைத்தான். உடனே அந்த எண்ணத்தைக் கைவிட்டான். அவனுக்கோ நன்றாக நீந்தத் தெரியாது. கப்பலிலிருந்து குதிப்பதற்கே மனசு இடம் பட்டாது. அப்படிக் குதித்துத் தட்டுத் தடுமாறிச் சென்று படகைப் பிடித்தாலும் அந்தக் கிராதகர்கள் என்ன செய்வார்களோ, என்னமோ ? தன்னிடம் அவர்களுடைய இரகசியத்தை . வெளியிட்டு விட்டார்கள் ! தான் அவர்களுடன் ஒரு நாளும் சேரப் போவதில்லை என்பதையும் தெரிந்து கொண்டார்கள். படகைப் பிடிக்கப் போகும் சமயத்தில் அவர்கள் தன்னைத் துடுப்பினால் அடித்துக் கொல்லப் பார்க்கலாம். தான் தண்ணீரில் தத்தளித்துக் கொண்டே படகில் உள்ளவர்களுடன் சண்டை போட முடியாது அல்லவா ?

போகட்டும் ! போய்த் தொலையட்டும்! அந்தச் சண்டாளக் கொலைகாரர்களுடன் ஒரு படகிலே இருப்பதைக் காட்டிலும் இந்தப் பெரிய கப்பலில் தன்னந் தனியாக இருப்பதே மேல் ! இதற்கு முன்னால் எத்தனையோ சங்கடங்களிலிருந்து கடவுள் கிருபையினால் தான் தப்பிப் பிழைக்கவில்லையா ? இந்த அபாயத்திலிருந்து

தப்புவதற்கும் கடவுள் ஏதேனும் வழி காட்டுவார்! பாவிகள் போகட்டும்!...

ஆனால் அவர்களை உயிருடன் போக விட்டது சரியா? அவர்கள் எங்கே போய்க் கரை ஏறுவார்களோ? இன்னும் என்னென்ன சூழ்ச்சிகளையும் கோர கிருத்யங்களையும் செய்வார்களோ? — கடவுள் இருக்கிறார். நாம் என்ன செய்ய முடியும்? எப்படியாவது இளவரசருடன் மறுமுறை சேர்ந்துவிட்டால் போதும்! இருந்தாலும் அவர் இப்படி என்னைக் கைவிட்டிருக்கக் கூடாது. பூங்குழலியுடன் என்னையும் யானை மீது ஏற்றி அழைத்துப் போயிருக்கலாம். மறுபடியும் அவரைச் சந்திக்க நேர்ந்தால், கட்டாயம் பலமாகச் சண்டை பிடிக்க வேண்டும். "உங்கள் பழைமையான சோழ குலத்தின் சிநேக தர்மம் இது தானா?" என்று கேட்க வேண்டும். ஆனால் அப்படிக் கேட்கும் சந்தர்ப்பம் வரப் போகிறதா?.... இளவரசரை மீண்டும் பார்க்கப் போகிறோமா?... ஏன் பார்க்க முடியாது? நான் இந்தச் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டதைச் சேநாதிபதியும் ஆழ்வார்க்கடியானும் பார்த்திருக்கிறார்கள். அவர்கள் ஏதாவது செய்யாமலா இருப்பார்கள்? இளவரசரை அவர்கள் சந்தித்திருந்தால் கட்டாயம் சொல்லியிருப்பார்கள் அல்லவா?

இப்படி வந்தியத்தேவன் யோசித்துக் கொண்டு நின்ற நேரத்தில் படகு கடலில் வெகுதூரம் போய் விட்டது என்பதைக் கவனித்தான். படகு அவ்வளவு வேகமாகச் சென்றது எப்படி? படகு மட்டும் போகவில்லை; தான் ஏறியிருந்த கப்பலும் இலேசாக அசைந்து நகர்ந்து கொண்டிருக்கிறது. அதனாலேதான் கப்பலுக்கும் படகுக்கும் அவ்வளவு சீக்கிரத்தில் அவ்வளவு தூரம் ஏற்பட்டு விட்டது! கடலில் அலைகள் பெரிதாகிக் கொண்டு வருவதையும் வந்தியத்தேவன் பார்த்தான். அது மட்டுந்தானா? இது என்ன? பட்டப் பகலில் திடீரென்று ஒரு பக்கம் இருண்டு வருகிறதே?

தென் மேற்குத் திசையை வந்தியத்தேவன் நோக்கினான். சற்று முன்னால் முழ உயரம் தெரிந்த மேகம் அதற்குள் பிரம்மாண்டமாக வளர்ந்து படர்ந்து மேற்கு வானத்தைப் பெரும்பாலும் மறைத்துவிட்டதைக் கண்டான். இன்னும் அம்மேகங்கள் திட்டுத் திட்டாகத் திரண்டு புரண்டு வானத்தில் வெகு வேகமாக மேலேறி வந்தன. அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே மேற்கு வானத்தில் பாதி தூரம் இறங்கியிருந்த சூரியனை மறைத்து விட்டன. பிறகு, மேற்குத் திசையும் தெற்குத் திசையும் மேலும் இருண்டு வந்தன. வானத்தின் கரிய மேகங்கள் கடலிலும் பிரதிபலித்துக் கடல் நீரையும் கரிய மை நிறமாகச் செய்தன. கடல் எங்கே முடிகிறது, வானம் எங்கே தொடங்குகிறது என்று கண்டுபிடிக்க முடியாமல் கடலும் வானமும் ஒரே கன்னங் கரிய இருள் நிறம் பெற்றிருந்தன.

மேகத் திரள்கள் மேலும் புரண்டு உருண்டு வந்தியத்தேவனுடைய தலைக்கு மேலே வந்தன. பிறகு கீழ்த் திசையிலும் இறங்கத் தொடங்கின.

படகு சென்ற திசையை வந்தியத்தேவன் நோக்கினான். படகு இருந்த இடமே தெரியவில்லை. அவனுடைய பார்வையின் எல்லைக்கு அப்பால் போய் விட்டது போலும்!

காற்றின் மெல்லிய ரீங்காரம் இப்போது 'ஹோ' என்ற பெரும் இரைச்சலாக மாறி விட்டது.

அத்துடன், நிமிஷத்துக்கு நிமிஷம் பெரிதாகி வந்த அலைகளின் இரைச்சலும் சேர்ந்தது.

கப்பலில் விரித்திருந்த பாய்கள் சடபடவென்று அடித்துக் கொண்டன.

மரங்களும் கட்டைகளும் ஒன்றோடொன்று உராய்ந்து ஆயிரம் குடுமிக் கதவுகளைத் திறந்து மூடும் சத்தத்தை உண்டாக்கின.

பாய் மரங்களை வந்தியத் தேவன் அண்ணாந்து பார்த்தான். அவற்றின் நிலையிலிருந்து கப்பல் ஒரு திசையாகப் போகாமல் சுழன்று சுழன்று வருகிறது என்று தெரிந்து கொண்டான்.

'சுழிக் காற்று' என்று அடிக்கடி சொன்னார்களே! அந்தச் சுழிக் காற்றுத் தான் அடிக்கப் போகிறது போலும்!

சுழிக்காற்று அடிக்கும் போது பாய் மரங்களிலிருந்து பாய்களைக் கழற்றிச் சுற்றி வைக்க வேண்டும் என்று வந்தியத் தேவனுடைய அறிவுக்குப் புலப்பட்டது. ஆனால் அவன் ஒருவனால் அது எப்படி முடியும்? பத்துப் பேர் சேர்ந்து செய்ய வேண்டிய காரியம் அல்லவா? பத்துப் பேர் இல்லாவிட்டாலும் நாலு பேராவது வேண்டும். ஒருவன் தனியாக என்ன செய்வது? கடவுள் விட்ட வழி விடுகிறார், கப்பல் அடைந்த கதியை அடைகிறது என்று சும்மா இருக்க வேண்டியதுதான்!

கப்பல் அடையப் போகிற கதி என்ன வென்று அவனுக்குச் சீக்கிரத்திலேயே தெரிந்து போயிற்று.

அப்படியும் இப்படியும் சிறிது நேரம் அலைப்புண்டிருந்து பிறகு கடலில் மூழ்கிப் போக வேண்டியதுதான்! மூழுகுவதற்கு முன்னால் சுக்குச் சுக்காக உடைந்து போனாலும் போகும்! கப்பலின் கதி எப்படியானாலும் தன்னுடைய கதியைப் பற்றிச் சந்தேகமில்லை!

நடுக் கடலில் மரணம்!

அந்தக் கும்பகோணத்துச் சோதிடன் இதைப் பற்றி ஒரு வார்த்தையும் சொல்ல வில்லை, பார்! சோதிடனும் சோதிடன்! அவனை மறுபடியும் பார்க்க நேர்ந்தால்.... பைத்தியக்காரத்தனம்! அவனை மறுபடியும் பார்ப்பது ஏது?

திடீரென்று வந்தியத்தேவன் தோளில் கெட்டியான பொருள் ஏதோ விழுந்தது. சட, படவென்று கப்பல் முழுவதும் சிறிய சிறிய கூழாங் கற்கள் விழுந்தன. கடலிலும் ஏராளமாக விழுந்தன. அந்தக் கூழாங் கற்கள் எப்படிப் பளிங்கு போல் பிரகாசிக்கின்றன! வானத்திலிருந்து இவை எப்படி விழுகின்றன!

இன்னும் இரண்டு மூன்று கற்கள் அவன் தலையிலும் முதுகிலும் தோள்களிலும் விழுந்தன. அவை விழுந்த இடத்தில் முதலில் வலி; பிறகு ஒரு குளிர்ச்சி. கப்பலில் விழுந்த கற்களைப் பார்த்தான். ஆ! அவை உருகிக் கரைந்து போய்க் கொண்டிருக்கின்றனவே? — ஆம்; இது பனிக் கட்டி மழை! அது வரை வந்தியத்தேவன் அத்தகைய மழையைப் பார்த்ததுமில்லை; அநுபவித்ததுமில்லை. மடிவதற்கு முன்னால் இந்த அற்புதத்தைப் பார்க்க முடிந்ததே என்ற குதூகலம் அவன் உள்ளத்தில் தோன்றியது.

கப்பல் தளத்தில் உட்கார்ந்து, கரைந்து கொண்டிருந்த பனிக் கட்டிக் கற்களைத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்தான். அப்பா! என்ன சில்லிப்பு! தொடும் போது தீயைத் தொடுவது போல் அல்லவா இருக்கிறது? ஆனால் தீ தோலைச் சுட்டுத் தீய்ப்பது போல் அது செய்யவில்லை. விரைவில் சூடு குளிர்ச்சியாகி விடுகிறது.

கல் மழை எதிர்பாராமல் வந்தது போலவே சட்டென்று நின்றது. பெய்த நேரம் அரைக்கால் நாழிகைகூட இராது.

பிறகு சாதாரண மழை பெய்யத் தொடங்கியது. மழை ஜலம் கப்பலில் விழுந்து சிதறி ஓடிக் கடலில் விழுந்து விடுவதை வந்தியத்தேவன் கவனித்தான். சோழ நாட்டு மரக்கலத் தச்சர்களின் கெட்டிக்காரத்தனத்தை வியந்தான். எத்தனை மழை பெய்தாலும் எத்தனை பெரிய அலைகள் மோதிக் கடல் ஜலம் கப்பலில் வந்தாலும், மீண்டும் கடலிலேயே தண்ணீர் போய் விழும்படியாக அக்கப்பல் அமைக்கப்பட்டிருந்தது. கப்பலின் கீழ்ப் பகுதி உடைந்து கடல் நீர் உள்ளே புகுந்தாலன்றி அதை மூழ்கடிக்க முடியாது!

இதைப் பார்த்ததும் அவனுக்குச் சிறிது தைரியம் உண்டாயிற்று. உடனே ஒரு நினைவு வந்தது. தன்னைக் கட்டிப் போட்டிருந்த அறைக் கதவு திறந்திருந்தால் அதன் வழியாகத் தண்ணீர் உள்ளே புகுந்து விடலாம். ஓடிப் போய்ப் பார்த்தான். அவன் நினைத்தபடி கதவு திறந்து காற்றில் அடித்துக் கொண்டிருந்தது. கதவை இறுக்கிச் சாத்தித் தாளிட்டான்.

மேலே காற்றும் மழையும் பொறுக்க முடியாமற் போனால் அந்த அறைக்குள்ளே புகுந்துகூடத் தான் கதவைத் தாளிட்டுக் கொள்ளலாம். பிறகு கடவுள் விட்ட வழி விடுகிறார் என்று நிம்மதியாக இருக்கலாம். இவ்வளவு பத்திரமான கப்பலை விட்டு அந்த முட்டாள்கள் இருவரும் படகில் ஏறிப் போய் விட்டதை நினைத்து வந்தியத்தேவன் அநுதாபப்பட்டான். ஆனால் அந்தப் படகின் அமைப்பும் விசித்திரமானதுதான். எவ்வளவு காற்று அடித்தாலும் மழை பெய்தாலும் அதை மூழ்க அடிக்க முடியாது. அப்படிப் படகு உடைந்து முழுகினாலும் பக்கத்தில் அதனோடு சேர்த்துக் கட்டியுள்ள கட்டை ஒன்று இருக்கிறது. அதைப் பிடித்துக் கொண்டு அந்தக் கொலை பாதகர்கள் தப்பிக் கரை சேர்ந்துவிடுவார்கள்! அநேகமாகக் கோடிக்கரைக்குச் சமீபமாகப் போய்க் கரை ஏறுவார்கள்!....

கோடிக் கரையிலிருந்து வந்தியத்தேவனுடைய உள்ளம் பழையாறைக்குத் தாவியது. சக்கரவர்த்தியின் திருக்குமாரிக்குத் தனக்கு நேர்ந்த கதி எப்படித் தெரியப் போகிறது? அவள் இட்ட பணியை நிறைவேற்றும் முயற்சியிலே தான் நடுக் கடலில் முழுகியதை யார் அவளுக்குத் தெரிவிக்கப் போகிறார்கள்? கடல் தெரிவிக்குமா? காற்று சென்று சொல்லுமா?—கடவுளே! அந்த மாதரசியைச் சந்திப்பதற்கு முன்னாலேயே நான் இறந்து போயிருக்கக் கூடாதா? போர்க்களத்தில் வீர மரணம் எய்தியிருக்கக் கூடாதா? சொர்க்க பூமியைக் கண்ணால் பார்க்

# 1வது சிறந்த தேர்வு

# மர்பி

## ம்யூஸாபிர்






மர்பியின் மற்ற மிகச் சிறந்த தயாரிப்புகள்:



மினி பாப் 2
2 பாண்ட் ரூ. 175.00



மினி மாஸ்டர் 4
2 பாண்ட் ரூ. 220.00



நூவ்பூரா
மீடியம் வேவ் ரூ. 110.00



ம்யூஸிஷியன்
மீடியம் வேவ் ரூ. 125.00

- கச்சிதமானது: அடக்கமானது: அழகியது இந்த சக்திவாய்ந்த 3-பாண்ட் டிரான்ஸிஸ்டரில் உலகின் எந்த நிலையத்தையும் தெளிவாகத் தொந்தரவின்றிக் கேட்கலாம்.
- டெலஸ்கோபிக் அன்டென்னாவும், உட்பொருத்தப்பட்ட சக்தி வாய்ந்த ஏரியலும் கொண்டது.
- எளிதில் கிடைக்கும் பெரிய சைஸ் டார்ச் பாட்டரிகளில் அமோகமாக இயங்குகிறது.

மர்பி ரேடியோ, இந்தியாவின் மிகப் பெரிய அதி நவீன டிரான்ஸிஸ்டர் பாக்டரியில் தயாரிக்கப்பட்டது. ரேடியோ தயாரிப்பில் 20 வருட ஆராய்ச்சி, அனுபவம் மற்றும் தொழில் நுட்பத் திறனைப் பின்பலமாகக் கொண்டிருப்பது.

உன்னத ஒலிநயம், சிறந்த அமைப்பு, சகாய விலை



விலைகள் சுங்கவரி நீங்கலாக உள்ளிட்டவை. மற்ற வரிகள் தனி.

**மர்பி** — இல்லத்தை மகிழ்விக்கிறது!

MAG 213R




# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால்
தான் பாங்குகளும் தொழிற்
சாலைகளும், கிடங்குகளும்
நவ-தால் பூட்டையே உபயோ
கிக்கின்றனர். அதிநுட்பமான
தயாரிப்பு! ஒவ்வொரு
பூட்டுக்கும் மாறுபட்ட
இணைப்புமுறையில் வெட்டப்
பட்ட சாவிகள். உடைத்து
திறக்க இயலாதபடி அதிக
பாதுகாப்பு அளிப்பதற்
கேற்ற முறையில் செய்யப்
பட்டது நவ-தால். பித்தளை,
எஃகினாலான இரட்டைக்கூடு
அதை மிகமிக உறுதியாக்கு
கிறது. தயாரிப்பவர்கள் :
கோத்ரெஜ்-பாதுகாப்பு
உபகரணங்களைத் தயாரிப்ப
தில் 70 ஆண்டுகளுக்கும்
மேலான அனுபவமுடைய
வர்கள்.

3 சைஸ்கள் :
60 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

கச் செய்து விட்டு உடனே அதல பாதாளத்தில் தள்ளுவது போல் அல்லவா இருக்கிறது !....

காற்றின் வேகம் அதிகமாகிக் கொண்டிருந்தது. கடலின் கொந்தளிப்பு மிகுதியாகிக் கொண்டிருந்தது. கப்பலின் பாய் மரங்கள் பேய் பிசாசுகளைப் போல் பயங்கரமான சத்தமிட்டுக் கொண்டு ஆடின.

இருள் மேலும் மேலும் கரியதாகிக் கொண்டு வந்தது. இருட்டை விடக் கரியதான இருட்டு எப்படி இருக்க முடியும்? — அப்படியும் இருக்க முடியும் என்று தோன்றியது.

திடீரென்று வானத்தில் ஒரு மின்னல் தோன்றி ஒரு மூலையிலிருந்து ஒரு மூலை வரை பாய்ந்தது.

அதற்குப் பிறகு தோன்றிய இருட்டு இருளைவிடக் கரியதாயிருந்தது.

மின்னலைத் தொடர்ந்து இடிமுழக்கம் கேட்டது: கப்பல் அதிர்ந்தது: கடல் அதிர்ந்தது: திசைகள் அதிர்ந்தன.

இன்னொரு மின்னல் அடிவானத்தில் இருளைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டது. அது மேலும் மேலும் நீண்டு, கப்பும் கிளையும் விட்டுப் படர்ந்து பற்பல ஒளிக்கோலங்கள் ஆகாசமெங்கும் போட்டு, வானையும் கடலையும் ஜோதி மயமாகச் செய்துவிட்டு, அடுத்த கணத்தில் அடியோடு மறைந்தது.

இடி முழக்கம் தொடர்ந்தது. அம்மம்மா! அண்டகடாகங்கள் வெடித்து விழுகின்றன என்பதில் சந்தேகமில்லை.

மேலும் மின்னல்கள்; இடி முழக்கங்கள். ''இன்னும் வானம் பிளக்கவில்லையே ; இது என்ன அதிசயம்!'' என்று வந்தியத்தேவன் எண்ணமிட்டானோ, இல்லையோ, அந்தக் கணமே ஆகாசம் வெடித்துப் பிளந்தது.

வெடித்த பிளப்பின் வழியாகப் பிரளய வெள்ளம் பொழிந்தது.

ஆம்; அதை மழை என்றே சொல்வதற்கில்லை. வான வெளியில் ஒரு கடல் குமுறிக் கொண்டிருந்து அது திடீரென்று தோன்றிய பிளவின் வழியாகக் கொட்டுவது போலவே இருந்தது.

கடல் அலைகள் ஆவேசத் தாண்டவமாடின. மின்னல் வெளிச்சத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் ஆடும் மலைச் சிகரங்கள் காட்சி அளித்தன.

காற்றின் கொம்மாளம் உச்சத்தை அடைந்தது. ஆடும் மலைச் சிகரங்களை அப்படியே பெயர்த்து எடுத்து வாயு பகவான் வானவெளியில் விசிறி எறிந்து விளையாடினார்.

வந்தியத்தேவனுடைய கப்பல் மீதும் அந்த நீர் மலைகளில் சில வந்துமோதின.

மேலேயிருந்து மழை வெள்ளம் தொபு தொபுவென்று கொட்டியது; நாலா பக்கமிருந்தும் அலைமலைகள் வந்து மோதித் தாக்கின. விரித்த பாய் மரங்கள் மீது சுழற் காற்று தாக்கிப் படுத்தியபாட்டைச் சொல்லி முடியாது. இவ்வளவையும் பொறுத்துக்கொண்டு அந்தச் சோழ நாட்டுத் தச்சர்கள் கட்டிய அதிசய மரக்கலம் சுழன்று சுழன்று வந்து கொண்டிருந்தது.

ஆனால், எவ்வளவு நேரந்தான் சுழன்று கொண்டிருக்க முடியும்? எவ்வளவு நேரம் அந்த மாபெரும் பூதங்களின் தாக்குதலைக் கப்பலினால் சமா



ளிக்க முடியும்? — முடியாது; இந்த விநாடியோ, அடுத்த விநாடியோ, கப்பல் முழுக வேண்டியதுதான். அத்துடன் வந்தியத்தேவனும் முழுக வேண்டியதுதான்.

எனினும், அந்த எண்ணம் அவனுக்கு இப்போது சோர்வை அளிக்கவில்லை. அப்படித் தனக்கு நேரப் போகும் மரணம் ஓர் அற்புதமான மரணம் என்று கருதினான்.

எழும்பிக் குதித்த அலைகளைப் போல் அவன் உள்ளமும் குதூகலத் தாண்டவம் ஆடத் தொடங்கியது.

காற்றின் பேரிரைச்சல், அலைகளின் பேரொலி, இடிகளின் பெரு முழக்கம்,

இவற்றுடனே வந்தியத்தேவனுடைய குரலும் சேர்ந்தது. ''ஹா ஹா ஹா!'' என்று வாய் விட்டுச் சிரித்தான்.

அந்தக் காட்சியை யெல்லாம் நன்ருய்ப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே அவன் முன்ஜாக்கிரதையுடன் பாய்மரத்தின் அடித் தண்டுடன் சேர்த்துத் தன்னைக் கட்டிக் கொண்டிருந்தான்.

கப்பல் சுழன்ற போது பாய்மரமும் சுழ்ன்றது;வந்தியத்தேவனும் சுழன்ருன்.

இப்படி எத்தனை நேரம் கப்பலும் பாய்மரமும் வந்தியத்தேவனும் சுழன்று கொண்டிருந்தார்கள் என்று தெரியாது. பல யுகங்களாகவும் இருக்கலாம்; சில விநாடிகளாகவும் இருக்கலாம். கால தேசவர்த்தமான உணர்ச்சிகளையெல்லாம் கடந்த அமர நிலையை வந்தியத்தேவன் அப்போது அடைந்திருந்தான்.

காற்றின் வேகம் சிறிது குறைவது போலத் தோன்றியது. பிரளயமாகக் கொட்டிய மழை நின்று விட்டது. சிறு தூற்றல்கள் போட்டுக்கொண்டிருந்தன.

மின்னலும் இடியும் நின்றுவிட்டது போலத் தோன்றியது. கடல் கன்னங்கரிய இருள் பிழம்பாகத் தோன்றியது.

வந்தியத் தேவன் சிறிது நேரத்துக்கு முன்னுல் மின்னல்களின் ஒளி வீச்சைத் தாங்க முடியாமல் கண்களை மூடிக் கொண்டிருந்தான். இடிகளின் பெரு முழக்கத்தைக் கேட்க முடியாமல் காதுகளைத் தன் கைகளினுல் இறுக்கிப் பொத்திக் கொண்டிருந்தான்.

இப்போது கண்ணைத் திறந்து பார்த்தான்; கைகளை அகற்றிக் காதுகளையும் திறந்து விட்டான்.

ஆகா! இவ்வளவு பெரிய சுழிக் காற்று விபத்திலிருந்து நான் தப்பித்துக் கொண்டேனு! கடவுள் காப்பாற்றி விட்டாரா? மீண்டும் பழையாறை அரசிளங் குமரியை இந்த ஜன்மத்தில் காணப் போகிறேனு? இளவரசரைச் சந்தித்து அளவளாவப் போகிறேனு?....

அதற்குள் அவசரப்படக் கூடாது. இந்தக் கப்பல் இப்போது எங்கே இருக்கிறதோ, யார் கண்டது? இது பத்திரமாய்க் கரை சேரும் என்று எப்படிச் சொல்ல முடியும்? கப்பல் தப்பினுலும் நான் உயிரோடு தப்பிக் கரையேறுவேன் என்பது என்ன நிச்சயம்?

இன்னும் எத்தனை எத்தனை அபாயங்கள் இருக்கின்றனவோ?....

**வ**ந்தியத் தேவனுடைய மனத்தில் இந்தக் கேள்வி எழுந்ததும் அதற்குப் பதில் சொல்வது போல வானத்தைக் கிழிக் கொண்டு ஒரு மின்னல் மின்னியது. அதன் பிரகாசம் அவன் கண்ணெதிரே நூறு சூரியனைக் கொண்டு வந்து நிறுத்தியது போல் இருந்தது. இருட்டிலாவது கொஞ்சம் பார்க்கலாம்; அந்தப் பயங்கரப் பிரகாசத்தில் ஒன்றுமே பார்க்க முடியவில்லை. தன் கண்களையே அம் மின்னல் பறித்துவிட்டதோ என்று வந்தியத்தேவன் அஞ்சினுன். எரிச்சல் எடுத்த கண்களை இறுக்கி மூடிக் கொண்டான். அந்தக் கணத்திலேயே அவன் செவிகளுக்கும் ஆபத்து வந்து விட்டது. எத்தனையோ இடி முழக்கங்களை வந்தியத்தேவன் முன்னம் கேட்டிருக்கிருன்; இன்றைக்கும் எத்தனையோ கேட்டான். ஆனுல் இப்போது இடித்த இடியைப் போல்—சே! அது இடியா? இந்திரனுடைய வஜ்ராயுதம் அவனுடைய காதின் வழியாகப் பிரவேசித்து மண்டைக்குள்ளேயே நுழைந்து தாக்கியது போல் இருந்தது.

சற்று நேரம் வந்தியத்தேவன் கண்களையும் திறக்க முடியவில்லை. காதிலோ 'ஒய்' என்ற சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

மூடியிருந்த கண்கள் ஏதோ சமீபத்தில் தலைக்கு மேலே புதிய வெளிச்சம் பரவியிருப்பதை உணர்ந்தன.

காதிலும் 'ஒய்' சத்தத்துக்கு மத்தியில் வேறெரு விநோத சத்தம் கேட்டது. காட்டில் தீப்பற்றி எரியும் போது, மரங்களில் தீப்பிடிக்கும் போது, உண்டாகும் சத்தத்தைப் போல் தொனித்தது.

வந்தியத் தேவன் கண்ணைத் திறந்து பார்த்தான். அவன் இருந்த கப்பலின் பாய் மரம் உச்சியில் தீப்பற்றி எரிவதைக் கண்டான்.

ஆகா! இப்போது புரிகிறது! அந்த மின்னல் ஏன் அவ்வளவு பிரகாசமாயிருந்தது, அந்த இடி ஏன் அவ்வளவு சத்தமாக ஒலித்தது என்று இப்போது விளங்குகிறது.

அந்தக் கப்பல் மேலேயோ, அல்லது, வெகு சமீபத்திலோ இடி விழுந்திருக்கிறது! அதனுல் பாய்மரத்தில் தீப்பிடித்திருக்கிறது!

பஞ்ச பூதங்களில் இரண்டு பூதங்கள் அந்தச் சோழ நாட்டு மரக்கலத்தைத் தாக்கி அழிக்கப் பார்த்தன. நீரும் காற்றும் தோல்வியுற்றன. வருணனும், வாயுவும் சாதிக்க முடியாத காரியத்தைச் சாதிக்க இப்போது அக்கினிபகவான் தோன்றியிருக்கிருர்! (தொடரும்)

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினுலும், பெருமிதத்தினுலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினுல் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!




எடுப்பான புதிய டின்!




மற்றும் பாமாலிவ் டால்க் டிலக்ஸ் —
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

PT.G.8 TAM.

# ராமாயணம்

ராஜாஜி

"நான் எப்படித் திரும்பிப் போய், என்ன சொல்லி, யாரைச் சமாதானப் படுத்துவேன்?" என்றான் சுமந்திரன் ராமனிடம். தேரைப் பார்த்து, "நீ இல்லாமல் சூனியமாக நிற்கும் இந்தத் தேரை நான் எப்படி ஓட்டுவேன்?" என்று சுமந்திரன் அழுது கொண்டேயிருந்தான்.

ராமன் மறுபடியும் சுமந்திரனுக்கு ஆறுதலும் தைரியமும் சொல்லிக் கஷ்டங்களைச் சகித்துக் கொண்டு பொறுமையுடன் இருப்பதே அவன் கடமை என்று கூறி அனுப்பினான்.

"குகனே! நீ விரும்பியபடி உன் ராஜ்யத்தில் நான் சந்தோஷமாக இருந்து கொண்டு பதினான்கு வருஷங்கள் கழிக்கலாம். ஆனால், அது நான் பிரதிக்ஞை செய்த வனவாசம் ஆகுமா? தகப்பனார் கொடுத்த வாக்கைச் சத்தியமாக்க நான் அயோத்தியை விட்டு வந்திருக்கிறேன். ஆனபடியால் தாபஸ வாழ்க்கை வாழவேண்டும். ருசியாகச் சமைக்கத் தெரிந்தவர்கள் பக்குவப்படுத்திய பதார்த்தங்களை நான் தொடக் கூடாது. பழம், கிழங்கு, காய் அல்லது விலக்கப்படாத மாமிசத்தை நாங்களே சம்பாதித்து வேள்வித்தீயில் சுட்டு ஆகாரம் செய்ய வேண்டும்."

இப்படிச் சொல்லிக் குகனைச் சமாதானப் படுத்தித் தங்கள் தலை மயிரை அவ்விடத்தில் ஆலமரத்துப் பாலால் திரித்து ஜடையாகச் செய்து முடித்துக் கொண்டார்கள்.

சீதையை ஓடத்தில் ஏற்றி உட்கார வைத்து, பிறகு இரு ராஜகுமாரர்களும் ஏறினார்கள். குகன் தன் ஆட்களுக்குச் சொல்லி ஓடத்தைச் செலுத்த உத்தரவிட்டான்.

ஓடக்காரர்கள் ஓடத்தைக் கங்கையில் வேகமாகச் செலுத்தினார்கள். நடு ஆற்றில் சீதை பாகீரதியைத் தியானித்து, "தேவி! எங்களுடைய விரதத்தை முடித்து மறுபடியும் உன்னைக் கடந்து க்ஷேமமாக ஊர் திரும்ப அருள்வாயாக!" என்று நமஸ்கரித்தாள்.

பிறகு பேசிக் கொண்டே கங்கையைக் கடந்து அக்கரை அடைந்தார்கள். அங்கே மூவரும் முதல் முதல் வேறு துணையின்றி நின்றார்கள்.

"லக்ஷ்மணா! நீதான் இனி எனக்குக் காவல் படை!" என்றான் ராமன். "நீ முன்னால் செல். சீதை உன்னை அடுத்தாற் போல் செல்ல வேண்டியது. நான் உங்கள் இருவருக்கும் பின்னால் வருவேன். வனவாசத்தில் கஷ்டங்கள் சீதைக்கு அதிகமாயிராமல் நாம் பார்த்துக்கொள்ள வேண்டும். இனி ஜனக் கூட்டம் கிடையாது. விளையாட்டு வேடிக்கைகள் கிடையாது."

அன்று ராமனுக்குக் கௌசல்யா தேவியின் நினைவு வந்து ரொம்பவும் துக்கப்பட்டான்.

"லக்ஷ்மணா! நீ திரும்பிப் போய் என்னைப் பெற்ற கௌசல்யா தேவியையும் உன்னைப் பெற்ற சுமித்திரா தேவியையும் பாதுகாத்தல் நலமல்லவா? நான் எப்படியாவது சமாளித்துக் கொள்ளுகிறேன்" என்றான், இதற்கு லக்ஷ்மணன், "மன்னிக்க



வும், நான் அயோத்திக்குத் திரும்பிப் போக முடியாது!'' என்றான். இது ராமன் எதிர்பார்த்த பதிலே.

இப்படி அடிக்கடி மானுஷ சுபாவம் தலையெடுத்துச் சக்கரவர்த்தித் திருமகன் துக்கப்படுவதையும் பேசுவதையும் பார்ப்போம். இதுவே ராமயணத்தின் அழகு. சர்வ வல்லமை பொருந்திய ஈசுவரன் ஈசுவரனாகவே இருந்து எல்லாம் செய்து முடித்து விட்டால், பிற்பாடு அவதாரம் ஏது? சாமான்ய தருமத்தை நிலைநாட்டுவது ஏது? ஆதி அவதாரங்களுக்கும் பிந்திய அவதாரங்களுக்கும் பேதம் இதுவே. ராமாவதாரத்தில் மானுஷ சுபாவத்தின் போக்கும் அதனுடன் சாதாரண தருமத்தின் விளக்கமும் சேர்ந்து வரும். இதைத்தான் ராமச்சந்திரன் யுத்தம் முடிந்து சீதை அக்னிப் பிரவேசம் செய்யும் சமயம் சொன்னான்.

**ஆத்மானம் மானுஷம் மன்யே**
**ராமம் தசரதாத்மஜம்**

''நான் என்னைத் தசரதன் மகன் ராமன் என்கிற மனிதனாகத்தான் எண்ணி வருகிறேன். உண்மையில் நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? எதற்காகப் பிறந்தேன்? — இந்த விஷயங்கள் எனக்கு எப்படித் தெரியும்? தாங்கள்தான் எனக்குச் சொல்ல வேண்டும்.'' இவ்வாறு அச்சமயம் ராமனே பிரம்மாவிடம் சொன்னதாக வால்மீகி எழுதியிருக்கிறார்.

கங்கையின் தென் கரையில் ராமன் துக்கப்பட்டுப் பேசிய போது லக்ஷ்மணன்



ராமனுக்குத் தைரியம் சொல்லித் தேற்றினான்.

அன்றைய இரவு ஆலமரத்தடியில் கழித்து மறு நாள் காலையில் புறப்பட்டு அஸ்தமிக்கும் சமயம் பரத்வாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடம் உபசாரங்களைப் பெற்று, ''எந்த இடத்தில் நாம் வனவாசம் ஏகாந்தமாகச் செய்ய முடியும்?'' என்று முனிவரைக் கேட்டு, அவருடைய யோசனையையும் ஆசியையும் பெற்றுச் சித்திரகூடம் சென்றார்கள்.

## 28. சித்திரகூடம்

பரத்துவாஜருடைய ஆசிரமத்தில் ஒரு ராத்திரி படுத்துத் தூங்கி, காலையில் எழுந்து ராம லக்ஷ்மணர்களும் சீதையும் மகரிஷியை வணங்கி விட்டுச் சித்திரகூட மலைக்குப் போகப் புறப்பட்டார்கள். தம் சொந்தக் குழந்தைகளை ஆசீர்வதிப்பது போல் வேறு துணையின்றி வனம் செல்லும் ராஜகுமாரர்களை முனிவர் மிக்க அன்புடன் மந்திரபூர்வமாக நற்செலவு கூறி வழி அனுப்பினார். போகும் வழியை நன்றாக விளக்கிச் சொன்னார். அவர் குறிப்பிட்ட மார்க்கமாகவே மூவரும் சென்றார்கள். முனிவர் சொல்லியபடி வேகமாக ஓடும் காளிந்தியாற்றைக் கடப்பதற்கு ஒரு தெப்பம் கட்டினார்கள். அதற்கு வேண்டிய மரக் கட்டைகளும் மூங்கில்களும் வெட்டிச் சேர்த்துக் காட்டுக் கொடிகளால் நன்றாகக் கட்டினார்கள். அதில் சீதை உட்காருவதற்காக லக்ஷ்மணன் இலைகளும் சிறு கிளைகளும் பரப்பி நன்றாக அமைத்தான். தெப்பத்தில் சீதையை ராமன் உட்காரச் சொன்ன போது கொஞ்சம் கூச்சத்தோடு ஏறி உட்கார்ந்தாள். பிறகு சீதையின் துணி மூட்டையையும், கிழங்கு வெட்டுவதற்கான குந்தாலி கூடை முதலியவற்றையும் சரியாகத் தெப்பத்தில் வைத்துத் தாங்களும் ஏறினார்கள். ஏறி மெதுவாக ஆற்றைத் தாண்டினார்கள்.

ஆற்றின் நடுவில் செல்லும் போது சீதை நதியை வணங்கி, நாதனுடைய பிரதிக்ஞை க்ஷேமமாக முடிந்து மூவரும் ஊர் திரும்பும்படி அருள்வாயாக என்று வேண்டிக் கொண்டாள்.

இவ்வாறே இன்னும் சில ஆறுகளையும் கடந்து சென்றபின் பரத்துவாஜ முனிவர் குறிப்பிட்ட பெரிய ஆலமரத்தைக் கண்டார்கள். அந்த ஆலமரத்தடியிலும் சீதாதேவி பூஜை செய்தாள். ''என் புருஷனுடைய விரதம் முடிவடைய வேண்டும். மரமே! கௌசல்யை, சுமித்திரை இவர்களை நான் திரும்பிப் பார்க்கும்படி அருள்வாய்'' என்று பிரார்த்தனை செய்தாள்.

''லக்ஷ்மணா! நீ முன்னால் சீதையுடன் செல்வாய். நான் பின்னால் ஆயுதபாணியாக நடப்பேன். வழியில் அவள் கேட்கும் பூவோ பழமோ எதை இஷ்டப்பட்டாலும் அதைப் பறித்துக் கொடுத்து அவளை உற்சாகப் படுத்திக் கொண்டே நடப்பாய்'' என்றான் ராமன்.

அவ்வாறே சீதையும், 'அந்த மரம் என்ன மரம்?' 'இந்தச் செடி என்ன செடி?' 'அதோ, அந்தக் கொடியைப் பாருங்கள்; அதில் புஷ்பங்களைப் பாருங்கள்!' என்று மிக ஆனந்தமாக ராமனையும் லக்ஷ்மணனையும் கேட்டுக் கொண்டும், அதற்குமுன் தான் பார்த்திராத புஷ்பங்களையும் பழங்களையும் பார்த்து மகிழ்ந்துகொண்டும் சென்றாள்.

பிறகு ஓர் ஆற்றங்கரையை அடைந்தார்கள். வனத்தில் அநேகவித மிருகங்களையும் பட்சிகளையும் சீதைக்குக் காட்டிச் சந்தோஷமாக உலாவிவிட்டு இரவில் ஆற்றங்கரையில் தங்கினார்கள்.

இவ்விடத்திலும் இன்னும் பல இடங்களிலும் ராம லக்ஷ்மணர்கள் வேட்டையாடி, பூஜைக்குத் தகுந்த அதாவது வழக்கப்படி சாப்பிடத் தகுந்த வேட்டையாகாரம் சம்பாதித்து உண்டார்கள் என்று வால்மீகி முனிவர் எழுதியிருக்கிறார். சந்தேகத்துக்கு இடமில்லாமல் வியக்தமாக எழுதியிருக்கிறார். இதைப் பற்றி நாம் குழப்பமடைய வேண்டியதில்லை. க்ஷத்திரியர்களின் ஆசாரப்படி மாமிச ஆகாரத்தில் குற்றமில்லை. காலத்துக்கும் குல வழக்கத்துக்கும் ஏற்றபடி உடலைப் பாதுகாப்பதற்காக எந்த உணவும் தக்க வழியில் சம்பாதித்து, பூஜையில் வைத்து அளவுக்கு மிஞ்சாமல் உண்பதில் யாதொரு தவறுமில்லை என்பது பாரத தேசத்துக்குப் பொது தர்மம்.

* * *

மறு நாள் காலையில் ராமன் லக்ஷ்மணனை எழுப்பி, ''தம்பி, மரங்களில் பறவைகள் மதுரமாகச் சப்திப்பதைக் கேள்! புறப்படுவதற்கு நேரமாயிற்று'' என்றான்.

லக்ஷ்மணன் வனவாச காலம் முழுவதும் சாப்பிடாமலும் தூங்காமலும் விரதம் காத்தான் என்கிற கதை வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படவில்லை. ஆனபடியால் லக்ஷ்மணனை அதிகாலையில் இன்னும் கொஞ்சம் தூக்க மயக்கத்திலிருந்த சமயம் ராமன் எழுப்பினான் என்று இவ்விடத்தில் சொல்லியிருப்பதில் முரண் ஒன்றுமில்லை.

உடனே லக்ஷ்மணன் தூங்காமல் தெளிந்து எழுந்தான். எல்லாரும் ஸ்நானம், ஜபம் முதலிய காரியங்களை முடித்துக் கொண்டு கிளம்பினார்கள்.

பரத்வாஜர் குறிப்பிட்டிருந்த வழியிலேயே சென்றார்கள். அப்போது வசந்த காலம். மரங்களும் செடிகளும் சித்திர விசித்திர வண்ணப் புஷ்பங்களைப் பூத்து, கொழுந்து விட்டெரியும் நெருப்பைப் போல் பிரகாசித்தன. சில மரங்களில் கனிகளும் துளிர்களும் கிளைகள் தாங்க முடியாதபடி பெரும் பாரமாகத் தொங்கின. "மனிதர்களால் சேதப்படுத்தப்படாத விருக்ஷங்களின் அழகைப் பார்! தேன்கூடுகள் தொங்குவதைப் பார்! கூவும் பறவைகளின் குரலைக் கேட்டாயா? எவ்வளவு மனோகரமாக ஒன்றுக்கொன்று பிரதிநாதம் செய்து கொண்டு, ஆனந்தமாக வசிக்கின்றன! இதையெல்லாம் அநுபவித்துக் கொண்டு நம்முடைய வனவாசத்தைச் சுலபமாகக் கழித்து விடலாம்" என்று ராமன் லக்ஷ்மணனுக்கும் சீதைக்கும் அவ்வப்போது சொல்லிக் கொண்டே நடந்தான்.

அதற்குள் சித்திரகூட மலை தென்பட்டது. அதைக் கண்டதும் மகிழ்ச்சியடைந்து வேகமாக நடந்தார்கள்.

"இந்த மலைப் பிரதேசத்தின் அழகு பார்க்கப் பார்க்க வளர்ந்து கொண்டே போகிறது! கிழங்குகளும், பழங்களும் நிறைந்த வனமாக இருக்கிறது. ஜலம் எவ்வளவு சுத்தமாகவும் ருசியாகவும் இருக்கிறது! ரிஷிகளும் ஆசிரமவாசிகளும் இருக்கும் இந்த வனத்தில் நாமும் சந்தோஷமாக இருக்கலாம்" என்றான் ராமன்.

* * *

**பி**றகு வசிப்பதற்கு ஆசிரமம் கட்டத் தீர்மானித்தார்கள். லக்ஷ்மணன் மிக சாமர்த்தியசாலி. எல்லாச் சௌகரியங்களும் கொண்ட வசதியான குடிசையைக் காற்றுக்கும் மழைக்கும் அசையாதபடி கட்டி முடித்தான். சாளரமும் கதவுகளும் அமைத்துப் பாய்களும் வேய்ந்து தொங்க விட்டு எல்லாம் அழகாக லக்ஷ்மணன் ஒருவனாகவே செய்து முடித்து விட்டான்.

ரமணீயமான சித்திரகூட மலைப் பிரதேசத்தில் மால்யவதி நதிக் கரையில் கட்டிய இந்த ஆசிரமத்தில் மூவரும் வசித்து வந்தார்கள். எந்தக் கவலையுமின்றி வனவாச தருமத்தை அநுசரித்து வந்தார்கள். பிறந்து வளர்ந்த நகரத்தை விட்டு வெளியேற்றப்பட்ட துக்கத்தை மறந்து விட்டு இந்திரன் தேவகணங்களுடன் சுவர்க்கத்தில் வசிப்பது போல் சந்தோஷமாகக் காலங் கழித்தார்கள்.

* * *

**க**ம்பரும் வால்மீகியும் இந்தக் கட்டத்தை ஒருவருடன் ஒருவர் போட்டி போட்டுக் கொண்டவர்கள் போல் அழகாக வர்ணிக்கிறார்கள்.

ஆசிரமம் கட்டி முடித்ததும் அந்தப் பர்ணசாலையைப் பார்த்து,

**"என்று கற்றனை நீ இதுபோல்?"**

என்று ராமன் தம்பியைக் கட்டி அணைத்துக் கண்ணீர் விட்டதாகக் கம்பர் பாடியிருக்கிறார். அப்படித் தானே நடந்திருக்க வேண்டும்!

"பூவைவிட மெல்லிய பாதங்களைப் படைத்த இந்த மிதிலை ராஜகுமாரி பெருங்காட்டையும் கடந்து தாண்டினள். அவளுடைய பாதங்கள் செய்த அற்புதத்தைப் போல், தம்பி, உன் கைகள் இந்தத் தச்சு கொத்து வேலையும் செய்து விட்டன! நம்முடைய துரதிர்ஷ்டத்திலிருந்து உண்டான நல்ல அதிர்ஷ்டத்தை உன் கைவேலையில் கண்டேன்" என்று ராமன் ஆனந்தக் கண்ணீர் விட்டதைக் கம்பர் அற்புதமான முறையில் பாடியிருக்கிறார். இதை டி. கே. சி. எனக்குப் பல தடவை அவருடைய தனிப் பாங்கில் பாடிக் காட்டி உள்ளத்தை உருக்கியிருக்கிறார். பின்னால் வரும் கஷ்டங்களையும் துக்கங்களையும் எடுத்துக் காட்ட ஓர் அற்புதப் பின்திரையாகிறது இந்தச் சித்திரகூட மகிழ்ச்சி நிலை.

கம்பரும் வால்மீகியும் இருவரும் இந்த இடத்தில் ராம லக்ஷ்மணர்களையும் சீதையையும் விட்டு விட்டு அயோத்தியைக்குச் செல்லுகிறார்கள். அயோத்தியையின் பரிதாப நிலையையும் பரதனுக்கு ஏற்பட்ட அநியாயப் பழியையும் துக்கத்தையும் கவனிக்கப் போகிறார்கள். **(தொடரும்)**

வாண்டு மாமா
எழுதும்
சித்திரத்
தொடர் கதை



# சிலையைத் தேடி..






# காந்தி மலர்

- ராஜாஜி
- ஹரால்ட் வில்ஸன்
- செஸ்டர் பௌல்ஸ்
- சுசீலா நய்யார்
- மு. வரதராசன்

ஆகியோரது கட்டுரைகள்

- புகைப்பட அனுபந்தம்
- கார்ட்டூனில் காந்தி
- சிறப்புச் சிறுகதை



# ஆலைவாய்க் கரும்பு

"கரும்பு தின்னக் கூலியா?"

இந்தக் கூலிப் பிரச்னை இன்று நேற்று ஏற்பட்டதல்ல; பல்லாண்டுகளுக்குமுன் ஏற்பட்டது. தின்னத் தீஞ்சுவைக் கரும்பையும் கொடுத்துக் கூலியும் கொடுப்பதாவது என்று பல தலைகள் மோதி ஒரு முடிவுக்கு வந்தன. சாறு வேறு சக்கை வேறாகப் பிரித்துக் கொடுத்து விட்டால், இந்தப் பிரச்னை தீர வேண்டியதுதானே? எனவே, ஆலை வாயில் போகும் கரும்பை ஆலை வாயில் கொடுத்தார்கள். அது சாறு வேறு சக்கை வேறாகப் பிரித்துக் கொடுத்தது. கரும்புக் கனி ரசத்தை மாந்தி மகிழ்ந்த மக்களுக்கு இயற்கை இன்னொரு வழியும் சொல்லித் தந்தது. காற்றும், சூடும், குளிரும் பட்டுச் சாறு உறைந்தது. உறைந்த சாற்றைப் பதனப்படுத்தும் வழியை மனிதன் கண்டான். வெல்லமாகவும் வெல்லச் சர்க்கரையாகவும் அது பரிணமித்தது. கரும்பு தின்னக் கூலி கேட்டவர்களுக்குச் சவால் விடுவதே போல, 'இனிப்பு வேண்டுமானாலும் இனி நீதான் கூலி தர வேண்டும். சக்கையைப் பிரித்துச் சாற்றை வேறாக்கி உன் வேலையைச் சுலபமாக்கித் தந்ததற்கு எங்களுக்கும் கூலி வேண்டாமா?' என்று கேட்கும் அளவுக்கு இன்று நிலை மாறியுள்ளது.

இப்படித் தொடங்கிய தொழில்தான் இந்தச் சர்க்கரைத் தொழில். இது முதன் முதலில் இந்தியாவில்தான் தொடங்கியிருக்க வேண்டும் என்பதற்கு வரலாறு சான்று கூறுகிறது. வெல்லம் காய்ச்சும் தொழிலை அறிவதற்காகச் சீன மன்னன் ஒருவன் கி.பி. அறுநூறாம் ஆண்டில் ஒரு தொழிற் குழுவை நம் நாட்டுக்கு அனுப்பி யிருக்கிறான்.

சர்க்கரை பல பொருள்களிலிருந்து தயாரிக்கப்படுகிறது. சில மர வகைகள், பீட்ரூட் போன்ற கிழங்கு வகைகள், திராக்ஷை, சோளம், பனை, ஈச்சை என்று எத்தனையோ அடுக்கிக் கொண்டு போகலாம். எல்லாவற்றைக் காட்டிலும் கரும்பிலிருந்து எடுக்கப்படும் சர்க்கரைதான் உலகத்திலேயே அதிகம்.

மனிதன் இப்படிச் சிரமப்பட்டுச் சர்க்கரை தயாரிக்கக் கற்றுக் கொண்டது எதற்காக? எல்லாம் தன் நலத்துக்காக — தன் உடல் நலத்துக்காகத்தான்; சர்க்கரை உடலுக்கு வேண்டிய உஷ்ணத்தையும் சக்தியையும் உடனடியாகத் தருகிறது என்பதற்காகத்தான்.

இந்தச் சர்க்கரைத் தொழில் கியூபாவுக்கு அடுத்தபடியாக வளம் பெற்றிருப்பது நமது இந்திய மண்ணில்தான். ஆண்டு ஒன்றுக்கு நம் நாட்டில் முப்பது முதல் முப்பத்திரண்டு லட்சம் டன் வரை சர்க்கரை தயாரிக்கப்படுகிறது. பீஹார், உத்தரப் பிரதேசம்









போன்ற மாநிலங்களில் தொடங்கிய இத் தொழில் நம் தமிழ் நாட்டிலும் சில ஆண்டு களாகச் சிறப்புறத் தொடங்கியிருக்கிறது. தமிழ் நாட்டில் உள்ள ஆலைகள் இந்த ஆண்டு நாற்பது லட்சம் டன் கரும்பை அரவை செய்து ஏறக்குறைய 3.5 லட்சம் டன் சர்க்கரை உற்பத்தி செய்துள் ளன. சீராக வேலை செய்தால் வருஷத்தில் பத்து மாதங்களுக்குக் குறையாமல் இதில் ஈடுபட்டிருக்கும் பணியாளர்களுக்கு நல்ல வேலை வாய்ப்பு இருக்கும்.

இத்தொழிலில் வளம் காண வேண்டி, பாரி, சக்தி, ஆரூரான், கோத்தாரி, அருணா என்று எத்தனையோ சர்க்கரை ஆலைக் கம் பெனிகள் இயங்கி வருகின்றன.

ஸ்ரீ பி. எஸ். லோகநாத முதலியாரையும் ஸ்ரீ பி. மருதைப்பிள்ளையையும் அறிந்தவர்கள், அவர்கள் எத்தனை தொழிலாற்றல் மிக்க வர்கள் என்பதையும் அறிவார்கள். எத் தனையோ தொழில்களைத் திறம்பட நடத்தி வரும் இவர்கள் சர்க்கரைத் தொழிலிலும் இறங்கி அமோகமான வெற்றி கண் டுள்ளார்கள். இவர்களுடைய மேற்பார்வை யில் நடைபெற்று வருவதுதான், தென்ஆர்க் காடு மாவட்டத்தைச் சேர்ந்த பெண்ணாடத் தில் இயங்கி வரும் அருணா சர்க்கரை ஆலை.

அருணா சர்க்கரை ஆலையைக் காண விரும்புபவர்கள் பெண்ணாடத்துக்குச் சென் றால் வழி கேட்டுத் திணற வேண்டியதில்லை. கரும்பங் கழிகளை ஏற்றிச் செல்லும் வண்டி களையோ லாரிகளையோ பின்தொடர்ந்தால் போதும், 'அருணா'வின் வாசலில்தான் போய் நிற்க வேண்டும்.

சர்க்கரை உள்ள இடத்தை எறும்புகள் மொய்ப்பது போல, சர்க்கரை ஆலைகள் உள்ள இடத்தைக் கரும்பு சுமந்து வரும் வண்டிகள் மொய்க்கும் என்று ஒரு புது மொழியே இனி நம் தமிழ்நாட்டில் உண் டாகலாம்.

இந்த வண்டிகளில் இருந்த கரும்பைப் பார்த்தால் நாணற் குச்சியைப் போலத் தோற்றமளித்தன. பொங்கலுக்கு வாங்கும் செங்கரும்பாகத் தோன்றவில்லை. விசாரித்த



முன் பக்கம் :

1. திரு பி. மருதைப் பிள்ளை
2. லாரிகளிலிருந்து கரும்புகள் இறக்கப்படுகின்றன
3. காற்று அற்ற கொதிகலன்கள்

இந்தப் பக்கம் :

1. திரு பி. எஸ். லோகநாத முதலியார்
2. சர்க்கரை பைகளில் அடைக்கப் படுகிறது
3. மின் நிலையம்

தில் இவை அதிகமான சர்க்கரை தரும் Co - cane என்று சொல்லப்படும் ஒட்டுக் கரும்புகள் என்று தெரிய வந்தது. இந்த ஒட்டுக் கரும்புகள் சாகுபடியில் கோவை மாவட்டம் முதலிடம் பெறுகிறது. கரும்புகள் அறுவடையான கையோடு ஆலைகளுக்கு வந்து விடுகின்றன. காலம் கடத்தினால் சாறு சுருங்கிக் கண்டி விடக் கூடும் அல்லவா ?

அருணா சர்க்கரை ஆலையில் வண்டி வண்டியாக வரும் கரும்புகளை அப்படியே எடை போட்டு இறக்கிக் கொள்ளப் புது முறை இயந்திரங்களைப் பயன்படுத்துகிறார்கள். லாரிகளில் வரும் கரும்பங் கழிகளைக் கொத்துக் கொத்தாகத் தூக்கிக் 'கிரேன்'கள் ஒரு பள்ளத்தில் போடுகின்றன. எத்தனை போட்டாலும் இந்தப் பள்ளம் நிரம்புவதில்லை. காரணம் அங்கே பொருத்தப்பட்டிருக்கும் Convéyer Belt என்று அழைக்கப்படும் பட்டைச் செலுத்திகள் மூலம் அரவைக்குப் போய் விடுகின்றன. வழியிலே ஓர் உருளை கோரப் பற்களுடன் சுற்றிக் கொண்டிருக்கிறது. தன் அருகே வரும் கரும்புகளை ஒரு சீராகத் துண்டம் போட்டு உள்ளே அனுப்புவதுதான் இதன் வேலை. ஒரு கரும்பாவது இதனிடம் மாட்டிக் கொள்ளாமல் தப்புமா என்று பார்த்தால் ஏமாற வேண்டியதுதான்.

ஆலைவாய்க்குள் நுழையும் கரும்பை யானை வாயில் போகும் கரும்பாகிவிடுமோ என்ற ஐயத்துடன் பார்க்கிறோம். ஆலைக்குள் சென்று பார்த்தால் 'கிரஷர்'கள் என்று கூறப்படும் ராட்சஸச் சாறு பிழியும் இயந்திரங்கள், இக்கரும்புத் துண்டங்களை நட்சத்திரையனுக் கிட்டி கட்டி நெரிக்கின்றன. அந்த வேதனை தாளாமல் கரும்பு கண்ணீர் வடிக்கிறது! அதற்குக் கண்ணீராக இருந்தாலும், காணும் நமக்கு நாக்கில் நீர் ஊறும். இந்தக் கரும்புச் சாற்றைப் பாடம் செய்து பருக முடியாதா என்று !

இப்படி ஒன்றா, இரண்டா ? நான்கைந்து இயந்திரங்கள், கரும்புத் துண்டங்களுக்குத் தண்ணீர் ஊற்றிக் கூடச் சக்கையாகப் பிழிந்தெடுத்து விடுகின்றன. 95 என்ன, 100 சதவிகிதம் சாற்றைப் பிழிந்தெடுப்பதில் அவை சக்கைப் போடாகப் போட்டி போடுகின்றன. அப்புறம் நம் கண்ணெதிரே முன்னேறுவது கரும்புச் சக்கைதான்! கரும்புச் சாறோ குழாய் வழியாக ஓடி மறைந்து விடுகிறது !

சக்கையைத் தொட்டுப் பார்த்தால் துளிக்கூட ஈரப் பசையின்றி உலர்ந்த சக்கையாகத் தோன்றுகிறது. இப்படி வெளிப்படும் சக்கை ஒருபுறம் மலையாகக் குவிந்திருக்கிறது. இத்தனை சக்கையையும் என்ன செய்வார்கள் என்று மலைத்து நின்ற பொழுது, 'சாறு காய்ச்ச இவற்றை எரிபொருளாக உபயோகிப்போம். மிகுதியைக் காகிதங்கள், அட்டைகள் செய்ய மாண்டியாவுக்கு அனுப்புவோம்' என்றார்கள். மாண்டியாவுக்கு அனுப்ப வேண்டிய சக்கை ராட்சஸ மைசூர்ப் பாகுக் கட்டிகளென ஒருபுறம் அடுக்கப்பட்டிருந்தன.

சர்க்கரை ஆலையைப் பார்க்க வந்துவிட்டு, இப்படிச் சக்கையைப் பார்ப்பதிலா முழு நேரத்தையும் செலுத்துவது ?

இப்படி எண்ணிக் கரும்புச் சாற்றைத் தேடி ஓடி வந்தால் அது ஒரு தொட்டியில் வந்து விழுந்திருந்தது. அந்தத் தொட்டியிலிருந்த சாற்றை அளந்து விட்டது இன்னொரு தொட்டி.

அந்த அளவைத் தொட்டியிலிருந்து தான் கரும்புச் சாறு, சுத்திகரிப்புப் பெட்டிக்குப் பாய்கிறது. சுத்தம் செய்வதற்குச் சுண்ணாம்பு நீரை உபயோகிக்கிறார்கள், 1000 காலன் சாற்றுக்கு 2 காலன் சுண்ணாம்பு நீர் என்ற விகிதத்தில். பிறகு சாற்றைக் கொதிக்க வைக்கிறார்கள். சுத்தப்படுத்துவதற்குக் கந்தகமும் முக்கியமான பொருளாகும். வேறு பல ஆலைகளில் கந்தகம் உபயோகித்தே சுத்தப்படுத்துகிறார்கள். ஆனால் அருணா சர்க்கரை ஆலையில் கந்தகத்துக்கு வேலை இல்லை.

'இப்படிக் கந்தகத்தை நீக்கிக் கரும்பஞ் சாற்றைச் சுத்தப்படுத்தும் முறையினால், நம் நாட்டுக்கு அந்நியச் செலாவணி மிச்சப்படுகிறது. அதோடு இந்த முறை சிக்கனமாகவும் இருக்கிறது!' — இதைக் கூறும் பொழுது, அருணா ஆலையில் பிரதம கெமிஸ்டாகப் பணியாற்றும் ஸ்ரீ அனில் சட்டர்ஜியின் முகத்தில் தான் என்ன பெருமை உணர்வு என்கிறீர்கள்! இந்தப் புது கண்டுபிடிப்புக்காக இவருக்கு அரசாங்கம் பரிசு கூட வழங்கியிருக்கிறது.

சுண்ணாம்பைக் கொண்டு சுத்தப்படுத்தும் சாற்றை இன்னும் தூயதாக்கக் கரியமில வாயுவைப் பயன்படுத்துகிறார்கள்.

இப்படிச் சுத்திகரிக்கப்பட்ட கரும்பஞ் சாறு 'எவாப்பரேடர்' என்று கூறப்படும் கொதி கலனை அடைகிறது. கரும்புச் சக்கையே அதைச் சூடாக்கிச் சுண்ட வைக்கிறது. 'சிரப்' என்று கூறப்படும் 'சீரா' வானபின், மற்றொரு கொதிகலனை அடைகிறது. அதிலே காற்று அற்ற (வாக்குவம்) வசதி செய்திருக்கிறார்கள். சர்க்கரைப் பாகு முறுகிவிடக் கூடாது என்பதற்காக இந்தக் கொதிகலன் தணிந்து எரிகிறது. இப்படிப் பல சித்திரவதைக்குள்ளாகிப் பாகு பதமாகிப் பிசின் உருவம் பெறுகிறது; தொட்டுப் பார்த்தால் மணல் மணலாகத் தோன்றுகிறது.

இந்த நிலையில் மிகவும் வேகமாகச் சுழலும் உருளைகளோடு கூடிய கலங்களைப் பாகு அடைகிறது. இந்தக் கலங்களை 'சென்டிரிஃபூகல்ஸ்' என்பர். இவை வேகமாகச் சுழலும் பொழுது சர்க்கரை மேலே திரண்டு வருகிறது. எடுத்துப் பார்த்தால் ஈரப் பசையுடன் சர்க்கரை பழுப்பு நிறத்தில் காட்சி தருகிறது. அடுத்தாற்போல் காய்ந்து வெளி வரும் பொழுது வெண்மையான சீரான மணல் போன்று நாம் பார்க்கும் சர்க்கரையாகத் தோற்றமளிக்கிறது. முன்பெல்லாம் வெண்மையாக்க 'போன் பினாக்' என்னும் சத்துப் பொருளைச் சேர்ப்பார்களாம். இப்பொழுதோ அது இல்லாமலே இந்த நிறமும் உருவமும் பெறும் வகையைக் கண்டு பிடித்து விட்டார்கள்.

சர்க்கரையைத் தொட்டுத் தொட்டுப் பார்த்த எங்களை, ''வாயில் போட்டுத் தான் பாருங்களேன் !'' என்றார்கள்.

வாயில் போட்டுப் பார்த்த நாங்கள் ''சர்க்கரையாகத் தித்திக்கிறதே !'' என்றோம்.

— ரா. வீழிநாதன்



சென்னை ஸ்ரீ டி. எஸ். சோமநாத அய்யர் அவர்கள் குமாரத்தி சௌ. டி. எஸ். மரகதத்துக்கும் கரூர், வி. சங்கர அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி எஸ். ராமஸ்வாமி M. Sc., க்கும் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# மேன்மேலும் அதிகமான மக்கள் **எஸிஸி** சிமெண்ட் வாங்குவதற்குக் காரணம்...
# அவர்களுக்குக் கிடைக்கும் இந்தப் பயன்களே

**தரம்:** ஒவ்வொரு எஸிஸி சோதனைக் கூடத்திலும் உற்பத்தியின் எல்லா நிலைகளிலும், மணிக்கொரு முறை தரக் கட்டுப்பாட்டுச் சோதனைகள் நடத்தப்படுகின்றன. சிமெண்ட் சாம்பிள்களை கல்கத்தாவிலும் பம்பாயிலும் உள்ள அரசாங்க சோதனை நிறுவனங்கள் முறையாகப் பரிசீலித்து சான்று வழங்குகின்றன.

**உற்பத்தியில் அனுபவம்:** இந்தியாவில் சிமெண்ட் உற்பத்தியில் எஸிஸி முன்னோடியாகத் திகழ்கிறது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் அதற்கு இப்பொழுது பதினாறு தொழிற்சாலைகள் உள்ளன.

**உத்தரவாதம்:** அனுபவம் மற்றும் தொழில்நுட்ப நிபுணத்துவத்தின் அடிப்படையில் எழுந்த நம்பிக்கையுடன், எஸிஸி தனது தயாரிப்புகளுக்கு உத்தரவாதமளிக்கிறது.



## இலவச தொழில் நுட்ப சேவை

எஸிஸியின் தொழில்நுட்ப நிறுவனமாகிய **கான்க்ரீட் அஸோஸியேஷன் ஆஃப் இந்தியா**, நமது நாட்டில் சிமெண்டின் உபயோகங்களைப் பரப்புவதிலும், மேம்படுத்துவதிலும் 42 வருட அனுபவம் உடையது. அதற்கு, ஆந்திரா, மதராஸ், மைசூர் மற்றும் கேரளா மாநிலங்களுக்குச் சேவை புரிவதற்கென செகந்திராபாத்தில் உள்ளது உட்பட, நான்கு அலுவலகங்கள் உள்ளன. அவற்றின் அனுபவம் மிக்க என்ஜினீயர்களும் சூப்பர்வைசர்களும் சிமெண்ட் மற்றும் கான்க்ரீட்டின் எல்லா உபயோகங்களையும் பற்றி நிபுணத்துவம் வாய்ந்த ஆலோசனையையும், தொழில்நுட்ப சர்வீஸையும் இலவசமாக வழங்குகின்றனர்.

**தி கான்க்ரீட் அஸோஸியேஷன் ஆஃப் இந்தியா.**

தலைமை அலுவலகம்: சிமெண்ட் ஹவுஸ், 121, மகரிஷி கர்வே ரோடு, பம்பாய்-20.

தென்னிந்தியாவிற்கு பிராந்திய அலுவலகம்:
செகந்திராபாத் —ஹோமத் பில்டிங், 664, ராஷ்டிரபதி ரோடு.

**எஸிஸி** தரம்சிறந்த சிமெண்டிற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட் ● தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்.

SISTA'S-CMI-429/A TAM

# ராஜரிஷி

## ரா. கணபதி



**வே**த மதம் என்பது அநுபவ விஷயம். அநுபவம் வேறு; யுக்தி வாதம் வேறு.

ஜனக மகாராஜனின் காலத்தில் பாஷண்ட பண்டிதர்கள் பலர் வேதம் கூறும் சத்திய மதத்தை எதிர்த்து வாதம் செய்தார்கள். வாதம் வென்றது: வேதம் தோற்றதாக மன்னனும் எண்ணினான்.

அப்போது வேத சத்தியத்தைத் தம்முள்ளேயே அநுபவித்த ஒரு மகான் மிதிலாபுரிக்கு வந்தார். 'பஞ்சசிகர்' என்பது அவரது பெயர். பஞ்சகோசங்களின் உண்மையை அறிந்த ஞான அக்னியாக விளங்கினார் பஞ்சசிகர். ஆறுகள் கடலில் விழுந்து தமது உருவையும் பெயரையும் இழப்பது போல், பஞ்ச இந்திரியங்களையும் ஆன்மக் கடலில் ஒடுக்கி விட்டவர் பஞ்சசிகர்.

மகான்களின் உடலில் புண்ணிய தீர்த்தங்கள் யாவும் இருப்பதாகச் சொல்வார்கள். 'ஸகல தீர்த்த தேன தனுமாரே' என்று நரசி மேதா இதையே 'வைஷ்ணவ ஜனதோ' பாடலில் சொல்கிறார். மகான்கள் ஸ்நானம் செய்வதால் வெறும் நீரும் புண்ணிய நீராகி விடுகிறது — 'தீர்த்தீ குர்வந்தி தீர்த்தானி' — என்கிறது ஸ்ரீமத் பாகவதம்.

சகல தீர்த்தங்களும் முடிகிற இடம் கடல். அதில் சங்கமித்தபின் ஆறுகளுக்குத் தனிப் பெயரும் உருவும் இல்லை. பரம்பொருளாகிற கடலில் கரைந்து, தம் தனிப் பெயரையும் உருவையும் இழந்து, பரம்பொருளாகவே ஆனவர்கள் மகான்கள். ஆறு அனவரதமும் கடலில் கலந்து கொண்டே இருக்கிறது; அதே சமயம் அனவரதமும் புவியில் ஓடிக் கொண்டே உலகுக்கு உணவும் உயிரும் தருகிறது. பரம்பொருளிடம் கலந்த போதிலும் உலகுக்கு ஓயாமல் உய்வு தருவார்கள் மகான்கள்.

மகான்களைப் புண்ணிய தீர்த்தங்களுடன் சேர்த்துச் சொல்வது வெறும் உவமை அணி மட்டுமல்ல. உண்மையாகவே அவர்கள் கங்கையும், காவிரியும், யமுனையும் தம் உடலில் மேவப் பெற்றவர்கள். இது எப்படி என்பதை விளக்க முடியாது. புண்ணிய தீர்த்தங்களின் பெருமையும், மகான்களின் மகிமையும் மூளையின் சாமர்த்தியத்துக்கும் வாக்கின்சாதுரியத்துக்கும் அப்பாற்பட்டவை.

மகானாகிய பஞ்சசிகர் மூளைக்கும் வாக்குக்கும் அப்பாற்பட்ட நிலையை அடைந்தவர். மூளையைக் கொண்டும் வாக்கைக் கொண்டும் வேதத்தை ஆட்சேபித்த பாஷண்டிகளை அவர் மிதிலையில் கண்டார். 'அநுபவம்தான் சத்தியம்; வாதம் சத்தியமல்ல. என்றாலும் அநுபவம் என்பது அவரவரும் தம் மட்டிலுமே உணரக் கூடியது; தர்க்க வாதமோ வெளிப்பட நிரூபிக்கக் கூடியதாகவும், அனைவருக்கும் பொதுவாகவும் உள்ளது' என்று கண்டார் பஞ்சசிகர்.

இந்த இக்கட்டான நிலைமையில் தமது அநுபவத்தின் மூலம் நேரடியாகப் பாஷண்ட வாதத்தை வெல்ல முடியாது எனப் புரிந்து கொண்டார். எனவே மூளைக்கும் வாக்குக்கும் மேம்பட்ட அநுபவ ஒளியையே மூளையின் மீதும் வாக்கின் மீதும் திருப்பி விட்டார். அதாவது, எதிர் வாதம் தொடங்கினார். உருவமற்ற பரம்பொருளை உருவங்களில் வழிபடுகிறோமல்லவா? இப்படியே வாதத்துக்கு அப்பாற்பட்ட சத்தியத்தையும் வாதத்தின் வழியே நிலைநாட்ட மகான்களால் முடியும். மிகவும் கடினமான காரியம். ஆயினும் அடியோடு இயலாத காரியமல்ல.

ஜனக மகாராஜன் சபையில் பஞ்சசிகருடைய வாதம் வென்றது. உடனே ஜனகர் இவருக்குச் சீடரானார். சீடருக்கு ஞான போதனை அளித்து விட்டுப் புறப்பட்டார் பஞ்சசிகர்.

**மனையாய் நினைத்த மனத்தை நீங்கினேன்**
**அனைத்தும் நானாய் ஆனமை உணர்ந்தேன்**

என்று கானம் செய்து கொண்டு ஆனந்தமாகக் கிளம்பி விட்டார் பஞ்சசிகர்.

புலன்களையும் அவற்றின் பிறப்பிடமான மனத்தையும் அடக்கி விட்டால், சின்னஞ்சிறிய 'நான்' என்பதிலிருந்து விடுபட்டு, அனைத்தும் தானாகி விடலாம். பஞ்சசிகர் கானம் செய்த அந்த ஞான நிலை தமக்கும் வந்து விட்டதாக எண்ணினார் ஜனகர்.

**உ**லகமும் அப்படியே எண்ணிற்று.

பரம ஞானியும் பிட்சுணியுமான சுலபை மட்டும் அப்படி எண்ணவில்லை.

'உலகை விட்டு நீங்கித் தவ வாழ்வு வாழ வேண்டியதில்லை. உலகிலேயே இருந்து கொண்டு வாழ்க்கையைத் தவமாக்கிக் கொள்ள வேண்டும். உலகினருடனேயே இருந்து கொண்டு ஞான வாழ்வு வாழ்வதால் அவர்களுக்கும் அதனால் பயன் ஏற்படும்' என்ற கருத்துக் கொண்ட ராஜரிஷி பிரதானரின் வழித் தோன்றலாக வந்தவள் சுலபை.

அவள் ஜனகரின் ஞான முதிர்ச்சியைச் சோதிக்க விரும்பினாள்.

அழகுக் கடலாக உருவம் தரித்து ஜனக சபையை அடைந்தாள் சுலபை.

அந்த அழகால் ஜனகர் சிறிதும் சஞ்சலம் அடையவில்லை.

தனது கர்த்த சக்தி பொருந்திய கண் வீச்சில் ஜனகரின் பார்வையைச் சிக்க வைப்பதற்கு முயன்றாள் சுலபை.

இவளது கண்கள் அவரது நயனங்களில் நிலைகுத்திட்டன. புருவ வில்லின் கீழிருந்து பார்வை அம்பு புறப்பட்டது.

ஆனால் ஜனகர் இம்மியும் சலனம் அடையவில்லை.

'நல்லது, இவர் உடலை வென்றுவிட்டார். ஆனால் அறிவை வெல்வது அதனினும் கடினம். அறிவுச் சுமையை எறிந்து விட்டு

இலேசாகும் ஞானம் இவருக்கு வந்ததா பார்ப்போம்' என்றெண்ணினாள் சுலபை.

தன்னுடைய புறக் கண் வீச்சில் அறிவை அம்பாகத் தொடுத்தாள்; ஜனகரின் கண்களுக்கு அப்பால் உள்ள அவரது அறிவில் அந்த அம்பை எய்து, அகழத் தொடங்கினாள்.

அவள் யோக சக்தியால் தமது புத்திக்குள் பிரவேசிப்பதை உணர்ந்தார் ஜனகர். சுலபையைப் பார்த்துச் சிரித்தபடி சொன்னார்: ''பெண்ணே! உன்னுடைய ஜாலம் இங்கு செல்லாது. நான் அரசனாகத்தான் தெரிகிறேன்; ஆனால் அரசு என்னைத் தொடவில்லை. வெளிப் பார்வைக்குப் பச்சை வித்தும், வறுத்த வித்தும் ஒரேபோல்தான் இருக்கும். ஆனால் வறுத்த வித்துக்கு எவ்வளவு நீர் வார்த்தாலும் அது முளைவிடாது. பஞ்சசிகர் என்னை ஞானத்தில் வறுத்தெடுத்து விட்டார். நான் உலகில் எவ்வளவு ஆழப் புதைந்தாலும் என்னிடம் பந்த முளை தோன்றாது. ஒரே சமயத்தில் ஒருவன் என் வலக்கைக்குக் களப சந்தனம் பூசுகிறான் என்றும், மற்றொருவன் என் இடக்கையை வாள் கொண்டு அறுக்கிறான் என்றும் வைத்துக் கொள். இரண்டும் எனக்கு ஒன்றாகவே இருக்கும். அவ்விருவரும் எனக்குச் சமமானவராகவே இருப்பார்கள்.

''பெண்ணே, கர்மம் புரிகையிலேயே ஞானத்தில் நிலைத்து நின்று மோட்சத்தைத் தேடிக் கொண்டவன் நான். உலகை விட்டு விட்டதால் மட்டும் மோட்சம் என்பதில்லை; உலகில் இருப்பதால் மோட்சம் இல்லை என்பதும் இல்லை. மனத்தை விடுவதுதான் மோட்சம். உலகில் இருந்து கொண்டே மனத்தை, அது கற்பிக்கும் பாசத்தை, பந்தத்தை அறுத்துவிடப் பஞ்சசிகர் உபதேசித்துள்ளார். தியாகக் கத்தியை வைராக்கிய பாறையில் தீட்டிப் பாசக் கயிற்றை அறுத்து விட்டேன். உன்னால் என்னைப் பிணிக்க முடியாது. என்னிடம் உனக்கு உள்ள பொறாமையால் நீ மதிமயங்கியிருக்கிறாய்; உன்னிடம் உள்ள யோக சித்தியின் பெருமையாலும் நீயே மதி மயக்கமுற்றிருக்கிறாய். யோக பலத்தால் உன் புத்தியை என் புத்தியுடன் சேர்த்துச் சபையில் என்னை மானபங்கப்படுத்த முயன்றாய். அமிருதத்தில் விஷத்தைச் சேர்ப்பது போன்ற தகாத சேர்க்கை இது. துஷ்டையான நீ யார்? நீ யாரைச் சேர்ந்தவள்? எங்கிருந்து வருகிறாய்?''

ஆறாச் சினத்துடன் அரியாசனத்திலிருந்து எழுந்தார் ஜனகர்.

சுலபை சற்றும் அஞ்சவில்லை. கலகலவென நகைத்து மறுமொழி கூறத் தொடங்கினாள். இந்த விருத்தாந்தத்தை மகா பாரத சாந்தி பருவத்தில் பீஷ்மரின் வாய்மொழியாக யுதிஷ்டிரனுக்குக் கூறும் வியாஸ மகரிஷி, 'சுலபை தன் தேகத்தைக் காட்டிலும் அழகான வார்த்தையைச் சொன்னாள்' என்கிறார்.

சுலபை சொல்கிறாள்: ''மிதிலாதிப! சகல பந்தமும் பாசமும் விட்டவனாக உன்னைச் சொல்லிக் கொண்டாயே, கடைசியில் உனக்கு ஏன் இவ்வளவு கோபம் வந்தது? நீயே எல்லாமாகி விட்டது போலவும், எல்லாரும் உன்னைச் சேர்ந்தவர்கள் போலவும் பேசினாய். நான் ஒருத்தி மட்டும் உன்னவளாக, உன்னைச் சேர்ந்தவளாகத் தோன்றவில்லையா? 'நீ யார்? யாரைச் சேர்ந்தவள்?' என்கிறாயே! சந்தனம் பூசுபவனையும் வாளால் அறுப்பவனையும் சமமாகப் பார்க்கும் நீ என்னிடம் ஏன் கோபம் கொள்கிறாய்? சொந்தக் கோப தாபம் இன்றி, உலக ரட்சணத்துக்காகவே ராஜ்யம் ஆண்டுவரும் உண்மை ஞானிதானா நீ என்று சோதிக்க வந்தேன். நீ வேதாந்த வார்த்தைகளை நிறையக் கேட்டு, அறிவினால் அவற்றை ஏற்றிருக்கிறாயே அன்றி, அநுபவத்தில் அவற்றை வாழ்ந்து காட்டவில்லை என்று இப்போது தெரிகிறது. மருந்து உண்ணும்போது அதற்குப் பத்தியம் விதிப்பார்கள். பத்தியம் இல்லாமல் மருந்தை மட்டும் உண்டால் விபரீதம் ஏற்படும். வேதாந்த அறிவு என்ற மருந்தை நாடிய நீ விநயம் என்ற பத்தியத்தை ஏற்கவில்லை எனக் காண்கிறேன். உன் மூளையை நான் ஆக்கிரமித்ததாக ஏன் இவ்வளவு ஆத்திரம் கொள்ள வேண்டும்? நீ உண்மை ஞானியானால் உடல் உணர்வு அற்றது போல், மன உணர்வும், மூளை உணர்வும் கூட அற்றுப் போய்விடும். உண்மை ஞானியின் மனமும் அறிவும் வெறும் சூனியமாகி விடும். அந்தச் சூனியத்தில் இறைவனே பிரவேசித்து உலக நலனுக்காகச் சிந்திப்பான். தவிர ஞானிக்குச் சொந்தச் சிந்தனை கிடையாது. நீயோ புத்தியை ஒரு சொந்தப் பொருளாக நினைத்து அதைக் காப்பாற்றிக் கொள்ள இந்தப் பாடு படுகிறாயே!''

ஏளனம் கொப்புளிக்கத் தொடர்ந்தாள் சுலபை: ''பிட்சுக்கள் காலி மனை எதிலும் தங்கலாம் என்பது தர்ம சாஸ்திரம் அல்லவா? நாடெல்லாம் புகழும் ராஜரிஷி ஜனகரின் புத்தி ஒரு காலி மனையாக இருக்கும் என்றெண்ணி அதில் என் புத்தியைத் தங்கச் செய்து பக்குவம் பெற எண்ணினேன். நான் துரதிருஷ்டசாலி. அந்தப் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை.''

மாமன்னரிடம் நடுச் சபையில் ஒரு பெண் இப்படிப் பேச முடிந்திருக்கிறது அந்தக் காலத்தில்! இதை விட ஒரு ஜனநாயகம் உண்டா? அந்த ஜனநாயகமே ஜனகநாயகம்.

ஜனகர் இப்போது 'ஆத்திரமுறவில்லை. வாயடைத்து நின்றார்.

சுலபை இறுதியாக உபதேசித்தாள்: ''அதோ பார், அரசே! அந்தக் கும்பத்தில் பால் இருக்கிறது. விளிம்பில் ஓர் ஈ அமர்ந்து கொண்டு பாலை நக்குகிறது. பாலை வைத்துக் கொண்டிருப்பதால் கும்பத்துக்குப் பாலின் தன்மை வந்துவிடவில்லை. ஈ நக்குவதால் பாலுக்கு ஈயின் தன்மை வந்துவிடவில்லை. உலகத்தில் ஒருவன் இருக்கலாம். அதனால் உலகின் தன்மை அவனுக்கு வரவேண்டியதில்லை. அவனை மனம் ருசி பார்க்கலாம். அதனால் அவன் மனமாகிவிட வேண்டியதில்லை.''

ராஜரிஷி வேஷம் போட்டது போதும். இனி ஆண்டியாகப் புறப்பட வேண்டியதுதான்' என்று முடிவு செய்தார் ஜனகர்.

காஷாயமும், தண்டமும், கமண்டலமும் கப்பரையும் தயாராயின.

பட்டமகிஷி அவரிடம் பதைபதைத்து வந்தாள். படபடவெனப் பேசினாள்:

''சந்நியாசிகள் என்று சிலர் உலகில் இருக்க வேண்டியதுதான். அதே சமயத்தில் சந்நியாசிகளைக் காக்கவும் ஒருவர் இருந்தாக வேண்டும் அல்லவா? யதி ரட்சணம் என்ற இந்தப் புண்ணியக் கடமையைப் பெற்ற நீரே யதியாகக் கிளம்புவது எப்படிப் பொருந்தும்? ஊருணி நீர் போல் உலகுக் கெல்லாம் பயனாகவே அரசனிடம் செல்வம் உள்ளது. பழ மரம் போல் பிறருக்குப் பயனாகவே அரசனிடம் அஷ்டலட்சுமிகளும் வாசம் செய்கின்றனர். லோகோபகாரமான அரச ஸ்தானத்தைக் காட்டிலும் உத்தமமான வேறு எதை உம்முடைய சந்நியாசத்தால் சாதித்து விட முடியும்? வைதிகர்களும், சாதுக்களும், மக்களும் உம்மையே நம்பி யிருக்க, அவர்களை விட்டுச் சென்று நம்பிக்கைத் துரோகம் செய்கின்ற நீர் உத்தம லோகத்தை எப்படி அடைவீர்? கப்பரையைத் தூக்கிக் கொண்டீரே, வெட்கமாக இல்லை? எப்போதும் கொடுத்துக் கொண்டே இருக்கும் ஸ்தானத்தில் பிறந்தவர், எப்போதும் வாங்கிக் கொண்டே இருக்கும் நிலைக்குத் தாழ்ந்து போகிறீரே! அப்படியே சந்நியாசியானாலும், கப்பரை எதற்கு? நீர் பிடி அரிசிக்காகச் செலவிடும் சிந்தை ராஜ்ய பாரச் சிந்தைக்கு இம்மியும் குறைவாக இராது. ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்காக எவ்வளவு கவலைப்படுகிறீரோ, அந்த அளவுக்கு இனி கடத்தையும், கப்பரையையும், தண்டத்தையும் காப்பாற்றக் கவலைப்படுவீர். மனத்திலுள்ள காஷயம்* நீங்காதவருக்குக் காஷாய வஸ்திரத்தால் பயன் ஏது?''

அன்றொரு பெண் ஜனகரை இடித்துரைத்தாள். இன்று மகிஷியே மொத்துகிறாள்.

* 'காஷம்' - அரிப்பு.



அன்று அவனுடைய வார்த்தையை மதித்தது போலவே இன்று இவனுடைய வார்த்தையையும் மதித்தார் ஜனகர்.

சிரத்தையால் சாதிக்க முடியாதது எதுவும் இல்லை. காலக்கிரமத்தில் ஜனகர் உண்மையாகவே ராஜரிஷியாகி விட்டார்!

மீண்டும் சோதனை!

இப்போது இறைவனே சோதிக்க வந்தான். பிராமண ரூபமெடுத்து மிதிலையில் ஒரு குற்றம் செய்தான் ஆண்டவன்.

அவனை அரசன் முன் கொண்டு வந்து நிறுத்தினர்.

அந்தணனைத் தேசப் பிரஷ்டம் செய்ய முடிவு செய்தார் ஜனக மன்னர். 'விதேகத்தை விட்டு வெளியே செல்' என்று அவர் ஆணையிட்டிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் சொல்ல விடாமல் பழைய வாசனை அவருள் சிறிதே வாடை வீசிற்று.

''என் ராஜ்யத்தை விட்டு வெளியேறி விடு!'' என்றார் அந்தணனை நோக்கி.

அந்தணன் சந்தனமாகச் சிரித்தான்: ''உன் ராஜ்யமா? அது எங்கே முடிகிறது என்று தெரிந்தால்தானே நான் அந்த எல்லைக்கு அப்பால் செல்ல முடியும்?''

ஆத்ம சாம்ராஜ்யத்துக்கு எல்லை ஏது? அந்த சாம்ராஜ்யத்தில் தாம் இன்னும் உறுதிப்படவில்லையே என முகம் கவிழ்ந்து வெட்கி நின்றார் ஜனகர்.

ஜனகர் ஆழ்ந்த கனிமையுடன் சொன்னார்: ''என் ராஜ்யமா? பிராமணரே, என்னைச் சோதிக்காதீர்! தங்களது தோற்றத்தையும் பேச்சையும் கள்ளச் சிரிப்பையும் கண்டால் தாங்கள் குற்றம் செய்த ஒரு சாதாரண பிராமணர் அல்ல என்று நிச்சயமாகத் தெரிகிறது. மகானுபிய தாங்கள் எனக்கு அநுக்கிரகம் புரியவேணும். எனக்கு இருப்பிடமே இல்லை என்ற உணர்வைத் தாருங்கள். இல்லை....இல்லை... என் இருப்பிடமாக இல்லாத இடமே இல்லை என்ற உணர்வைத் தாருங்கள்.''

பிராமணன் இதற்குப் பதில் சொல்லவில்லை. இறைவன் பதில் சொல்கிற பாணியே வேறல்லவா? தன் மாய சக்தியை ஏவினான்.

அவ்வளவுதான்! மிதிலை நகரம் பற்றி எரியலாயிற்று.

அரசன் என்ற முறையில் தீயை அணைக்க எல்லா முயற்சிகளும் எடுக்கிறார் ஜனகர். ஆனால் அவரிடம் எவ்விதப் பதற்றமும் இல்லை. நகரமெல்லாம் கலங்கிக் கூக்குரலிடும்போது கலக்கத்தையும் கூக்குரலையும் நீக்கச் சகல யத்தனமும் செய்கிறார் ஜனக மன்னர். ஆனால் அவர் சிறிதும் கலங்கவில்லை. ஒரு காலும் கூக்குரலிடவில்லை. மலர்ந்த முகத்துடனேயே பணி புரிகிறார்.

''மகாராஜா! தங்களது செல்வக் குவியல்கள் நிறைந்த பகுதிக்கும் தீ பரவி விட்டது'' எனப் பணியாட்கள் முறையிடுகின்றனர்.

''என் செல்வக் குவியலா?'' என்று நகைக்கிறார் ஜனகர்.

'ஆத்மாவைத் தீ எரிக்காது; நீர் நனைக்காது' என்று வெகு காலத்துக்குப் பிறகு கீதா வாக்கியத்தால் குறிப்பிடவிருக்கும் அந்தப் பிராமண வேஷக்காரன், ''ஜனகரே! ஜயித்து விட்டீர்'' என்று மெச்சினான்.

அடுத்த கணமே தீ மறைந்தது.

முன்போலவே மிதிலாபுரியின் மாடங்களும் கூடங்களும் எழுந்தன.

அந்தணன் அந்தர்த்தானமானான்.

தீ ஜனகரைத் தீண்டவில்லை. நீரை எப்படி நெருப்புத் தொடும்? அவர் எல்லாத் தீர்த்தங்களும் தம்முள் கலந்துவிட்ட பூரண ஞானக் கடலாகி விட்டார்.

அரசியல் கடமையை வழுவாது ஆற்றிக் கொண்டே ஞானியாக விளங்கியவர் ஜனகர். வேதாந்த ஞானத்தில் ஆழ்ந்திருந்தபோதே வாளெடுத்தும் போர் புரிந்தவர் அவர். பிரதர்த்தனன் என்ற மன்னனை எதிர்த்து அவர் போரிட்டதையும் அப்போது வீரர்களுக்கு அவர் உற்சாகமூட்டியதையும் சாந்தி பருவத்தில் அறிகிறோம்.

ராமாயணத்தில் ஸ்ரீ சீதாராம விவாகத்தின்போது ஜனகரே தம் போர்த் திறனைக் குறிப்பிடுகிறார். ஸாங்காசிய மன்னனுடன் தாம் போரிட்டு வெற்றி கண்ட பின், அவனுடைய ராஜ்யத்துக்குத் தமது சகோதரன் குசத்வஜரை மன்னராக நியமித்ததைக் கூறுகிறார். இதே ஜனகர் பிரம்மஞானிகளின் முழுமதியான சுகருக்கு உபதேசித்ததாகப் பாரதம் தெரிவிக்கிறது.

பிரம்மவித்தையில் தலைசிறந்தவரைக் கண்டெடுக்க வேண்டும் என்ற விருப்பத்தின் மீது ஜனகர் நடத்திய மகத்தான வித்வத் சதஸைப் பற்றி பிருஹதாரண்ய உபநிஷதம் பேசுகிறது. யாக்ஞவல்கியரிடம் அவர் ஞானோபதேசம் பெற்றதையும் அது கூறுகிறது.

தர்மத்வஜர், ஸீரத்வஜர், விதேகர் என்ற பெயர்களில் பல ஜனகர்கள் இருந்ததாகக் கருதப்படுகிறது. இவர்களில் ஸீரத்வஜ ஜனகரே சீதையின் வளர்ப்புத் தந்தை என்று பாகவத நவம ஸ்கந்தம் கூறுகிறது. ஸீரம் என்பது ஏர்க்கால். ஸீரத்வஜர் உழவுக்கு முக்யத்துவம் தந்தவர். இவர் யக்ஞ பூமியை உழுதபோதுதான் ஏர் முனையில் ஜகன்மாதா பாலிகையாக அகப்பட்டாள். ஏர் முனையின் பெயரே சீதா. ஆன்ம உழவு செய்து கொண்டவர்களுக்கு ஞானாம்பிகை நிச்சயம் கிடைப்பாள்!

ஜகன்மாதாவுக்கு வளர்ப்புத் தந்தையாகிறார் ஜனகர். அதனாலேயே தேவிக்கு ஜானகி எனப் பெயர் ஏற்பட்டது. தேக உணர்வு நீங்கி, விதேகர் என்று அவர் குறிப்பிடப்பட்டதாலேயே சீதைக்கும் வைதேகி என்று ஒரு பெயர் வழங்கலாயிற்று. அவள் கருணை வெள்ளம். அவளைத் தந்தையாக வளர்த்தவரும் கருணை வெள்ளமாகத்தான் இருந்திருக்க வேண்டும். அந்த வெள்ளத்தில் எல்லாப் புண்ணிய நதிகளும் ஐக்கியம்தான்—ஸகல தீர்த்த தேஜ நதுமாரே!

படம்: கனுதேசாய்

# 'ஆஸ்ப்ரோ'
# மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது**

நிக்கோலஸ் ® தயாரிப்பு

AS.27.TAM

# தீராத விளையாட்டு

பதினைந்து நாட்கள் சென்ற பின் வருவதாகச் சொன்ன சிவலிங்கம் சொன்னபடியே வந்துவிட்டான். அவன் வரும்போது வீட்டில் இருந்தவர்கள் ரங்கராஜனும், நிர்மலாவும், சமையற்காரக் கிழவியுமே. அவனை ரங்கராஜன் வரவேற்றான். தன் வீட்டிலேயே சாப்பிடச் சொன்னான். தன் மனைவியின் குடும்பத்துக்குப் பல கஷ்டமான சமயங்களில் உதவி செய்தவன் என்பதைப் பாலுவின் வாய்மொழி மூலம் கேள்விப்பட்டிருந்த ரங்கராஜன், சிவலிங்கத்தினிடம் அலாதியான ஒரு மதிப்பே வைத்திருந்தான்.

அவன் வந்த நிமிஷத்திலிருந்தே நிர்மலா மிகவும் கலகலப்பாக இருந்தாள். அவனை அவள் உபசரிக்கும் பாங்கைக் கண்டு ரங்கராஜன் மிகவும் சந்தோஷப்பட்டான். அப்போது அவன் சிவலிங்கத்தைப் பார்த்துச் சொன்னான்: ''ஐயா! இது உங்கள் வீடு மாதிரி. நிர்மலாவின் பிறந்த வீட்டுக்கு ரொம்ப வேண்டியவங்களா இருக்கிற நீங்க, எங்களுக்கும் வேண்டியவங்கதான். அடிக்கடி நீங்க இங்கே வரணும். குடும்பத்தோடவே ஒரு தடவை வந்துட்டுப் போகணும்.''

சிவலிங்கமும் சந்தோஷமாகத் தலை ஆட்டினான்.

அன்று பிற்பகலில் வெளியில் தனக்கு வேலை இருக்கிறது என்று சொல்லிப் புறப்பட்டான் ரங்கராஜன். முத்துக்குமார் வீட்டுக்கு வருவதாகச் சொல்லி யிருந்த அவன், அங்கு செல்லத் தயாரானான். சிவலிங்கமும் எழுந்து, தானும் ஊருக்குப் போய் விட்டு வருவதாகச் சொல்லி விடை பெற்றுக் கொண்டான். இருவரும் சேர்ந்தே வெளியில் வந்தார்கள். தெற்கு ஆவணி மூல வீதிக்கு வந்ததும், இருவரும் பரஸ்பரம் விடை பெற்றுக் கொண்டு வெவ்வேறு திசைகளில் பிரிந்தார்கள்.

முத்துக்குமார் வீட்டில் அன்று சில விருந்தினர்கள் வந்திருந்தார்கள். அதனால் அரை மணி நேரத்துக்கு மேல் அங்கே ரங்கராஜன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க முடியவில்லை. அத்துடன் விருந்தினர்களை பஸ் ஸ்டாண்டு வரையிலும் போய் வழியனுப்பி விட்டு வர வேண்டியிருக்கிறது என்று முத்துக்குமார் சொல்லவே ரங்கராஜன் அங்கிருந்து புறப்பட்டு விட்டான். நேரே வீட்டை நோக்கியே வந்தான். வந்து பார்க்கும் போது வாசற் கதவு தாழிடப்பட்டிருந்தது.

''பாட்டி! பாட்டி!'' என்று சொல்லி ரங்கராஜன் கதவைத் தட்டினான்.

கதவு திறக்கவில்லை.

'பாட்டி தூங்குகிறாள் போலிருக்கிறது. நிர்மலா எங்கே போனாள்?' என்று நினைத்துக் கொண்டு, ''நிர்மலா நிர்மலா!'' என்று கூவிக் கதவைத் தட்டினான்.

அப்பொழுதும் கதவு திறக்கவில்லை. பலமாகத் தட்டிப் பார்த்தான். அதற்கும் பதில் இல்லை.

ரங்கராஜனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சமையற்காரக் கிழவி எவ்வளவு ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தாலும் 'கிறீச்'சென்று சத்தம் கேட்டால் விழித்துக் கொண்டு விடுவாள் என்பது அவனுக்குத் தெரியும். அப்படி இருந்தும் ஏன் இன்னும் கதவைத் திறக்காமல் இருக்கிறாள்? நிர்மலாவுக்கும்—அவள் மாடியில் தூங்கிக் கொண்டிருந்தாலும் — கதவு தட்டும் ஓசை கேட்டிருக்க வேண்டுமே!

ரங்கராஜன் திகைத்துப் போய்ச் சுற்று முற்றும் பார்த்தான். இரும்பவும் ஒரு தடவை பலமாகக் கதவைக் குத்தி, ''நிர்மலா! நிர்மலா!'' என்று அழைத்தான். கை வலித்ததே தவிர கதவு திறக்கவில்லை.

கதவைப் பூட்டிக்கொண்டு வெளியே போய் விட்டார்களா என்றால் அதுவும் இல்லை. உள்ளேதான் தாழிடப்பட்டிருந்தது.

ரங்கராஜன் ஒன்றும் தோன்றாமல், தெருவைப் பார்த்துக் கொண்டு வாசற்படியிலேயே நின்று கொண்டிருந்தான்.

அப்போது தெருக் கோடியில் சமையற்காரக் கிழவி கையில் ஒரு துணிப் பையுடன் வந்து கொண்டிருந்தாள். நிர்மலா அவளைப் பின்தொடர்ந்து வருகிறாளா என்று பார்த்தான். வரவில்லை. அவனுக்கு இன்னதென்று சொல்ல முடியாதபடி வியப்பும், திகைப்பும் உண்டாயின.

கிழவி அருகில் வந்ததும், ''எங்கே போயிருந்தே பாட்டி? வீட்டிலே யாரும் இல்லையா?'' என்று திகைப்புடன் கேட்டான் ரங்கராஜன்.

''அம்மா இருந்தாங்களே, ஐயா?'' என்றாள் கிழவி.

''எந்த அம்மா?''
''சின்ன அம்மாதான்.''
''காணுமே! கதவைத் தட்டித் தட்டிப் பார்த்தேன்?''
''வீட்டிலே இல்லாமெ எங்கே போயிட்டாங்க? மத்தியானம் நம்ம வீட்டிலே சாப்பிட்டாரே, அவர் கூட வந்திருந்தார். என்னைப் போய் ஆரஞ்சுப் பழம் வாங்கி வரச் சொன்னாங்க சின்ன அம்மா. வாங்கிட்டு வர்றேன்'' என்றாள் கிழவி.

ரங்கராஜன் உடனே திரும்பி, கதவைப் பலமாகத் தட்டி, ''நிர்மலா!'' என்றான்.

கதவு திறந்து விட்டது.

உள்ளே சென்றதுமே, தலைகுனிந்து கொண்டு நின்ற நிர்மலாவைப் பார்த்தான் ரங்கராஜன்.

''ஏன் இவ்வளவு நேரமாக் கதவைத் திறக்கல்லே நிர்மலா?'' என்று கேட்டான் அவன்.

''தூங்கிட்டேன்'' என்று மென்று விழுங்கிக் கொண்டே பதில் சொன்னாள் அவள்.

ஆனால் அவள் முகத்தில் அப்போது தூக்கக் களையே இல்லை. அதை ரங்கராஜனும் கவனித்துக் கொண்டான்.

''தூங்கிட்டயா?'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நகர்ந்த அவன் கண்களுக்கு; மாடிப் படியின் அருகில் கிடந்த ஒரு ஜோடி பெரிய செருப்புக்கள் தென்பட்டன. அதைப் பார்த்ததும், அவனுக்குப் 'பகீர்' என்றது. விறுவிறு வென்று மாடிக்குச் சென்றான்.

அங்கே சிவலிங்கம் நின்று கொண்டிருந்தான்.

ரங்கராஜன் அவனை ஏறிட்டுப் பார்த்ததும், அவன் நெடுஞ்சாண் கிடையாகக் காலில் விழுந்தான். ரங்கராஜனுக்குச் சுய உணர்வே இல்லை.

கு. அழகிரிசாமி

''சாமி! நான் உண்ட வீட்டுக்கு ரெண்டகம் செய்த பாவி. என் புத்தியைப் பறி கொடுத்திட்டேன். என் புத்தியைப் பறிகொடுத்திட்டேன்'' என்று கதறினான் சிவலிங்கம்.

ரங்கராஜனின் காதில் அவனுடைய குரலே விழவில்லை. தலை சுற்றியது. தடுமாறிக் கொண்டே அறைக்குள் போய் ஒரு நாற்காலியில் தொப்பென்று விழுந்தான். உடம்பெல்லாம் படபடத்தது. வியர்த்துக் கொட்டியது. அப்படியே நாற்காலியில் சாய்ந்து நெடுமூச்செறிந்தான். சிறிது நேரத்தில் கண்கள் இருண்டு விட்டன.

கீழே நிர்மலா அழுது கொண்டே சமையற்கட்டுக்கு ஓடி அங்கே வெறுந் தரையில் விழுந்தாள். இதைப் பார்த்த கிழவி பயந்து போய், ''ஐயா! ஐயா!''

Bensons/3358/7 TAM

# ப்ரூக் பாண்ட்

# ப்ரூ இன்ஸ்டன்ட்

## நொடிப் பொழுதில் தயார்! கப்புகள் கணக்கிலே திருப்தி!

ப்ரூ தயாரிப்பது சுலபம்! வெந்நீரை ஊற்றி, விரும்பும் சுவை பெற பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கொள்ளவும். அசல் காபி—சிக்கரி மணமும் சுவையும் கொண்டு உங்களுக்குப் புத்துணர்ச்சி அளிக்க நொடிப் பொழுதில் ப்ரூ தயாராகிவிடுகிறது!

நினைவிருக்கட்டும், ப்ரூ தயாரிப்பதிலே, சிறிதுகூட சிரமமோ அல்லது வடிகட்டும் தொந்தரவோ கிடையாது.

இதற்கு மேலாக, நீங்கள் விரும்பும் சுவைக் கேற்றபடி ப்ரூவை சிறிது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ சேர்த்து தயாரித்துக் கொள்ளலாம்.

வாங்குங்கள் ப்ரூ—காபியும் சிக்கரியும் கலந்த சுவையை நன்கறிந்த ப்ரூக் பாண்டின் ருசி பார்த்துத் தரம் காணும் திறமையாளர்களால் கவனத்துடன் கலக்கப்பட்டது.

இது நொடிப் பொழுதிலாகிறது!
நேரம் மிச்சம்!
பணம் மிச்சம்!



என்று ரங்கராஜனை உரக்கக் கூவி அழைத்தாள்.

மாடியிலிருந்து பதிலே வரவில்லை. கிழவி ஒன்றும் புரியாமல் முன்னும் பின்னும் ஓடி, கடைசியில் மாடிக்கே வந்து சேர்ந்தாள். அவள் வந்ததுமே சிவலிங்கம் படி வழியே இறங்கி வெளியே போய்விட்டான். கிழவி ரங்கராஜனைத் தேடினாள். அவன் நாற்காலியில் சரிந்து மூர்ச்சித்துக் கிடப்பதைப் பார்த்ததும், ''ஐயையோ! இது என்னான்னு தெரியல்லியே! கடவுளே!'' என்று புலம்பிக் கொண்டு பக்கத்திலிருந்த தண்ணீர்க் கூஜாவை எடுத்துக் கையில் ஊற்றி ஊற்றி அவன் முகத்தில் தெளித்தாள்.

ரங்கராஜனுக்குச் சிறிது சிறிதாகப் பிரக்ஞை வந்தது. இலேசாகக் கண் விழித்துப் பார்த்தான்.

''ஐயா!'' என்றாள் கிழவி.

ரங்கராஜன் நாற்காலியிலிருந்து எழுந்தவன் தரையில் விழுந்துவிட்டான்.

## அத்தியாயம் 10

ரங்கராஜனுக்கு மூர்ச்சை தெளிய அதிக நேரம் ஆகவில்லை. முகத்தில் குளிர்ந்த நீர் விழுந்ததுமே தெளிந்து விட்டது. ஆனால் அவனுடைய பிரக்ஞை தெளிய, தன்னுணர்வு திரும்ப மூன்று நாட்கள் ஆகிவிட்டன. பைத்தியம் பிடித்தவன்போல் மனம் குழம்பிப் போய் நடமாடிக் கொண்டிருந்த அவன், சிறிதே மனத் தெளிவு பெற்றதும் பரிதாபகரமாகத் தனக்குத் தானே 'எல்லாம் பொய்யாகி விட்டது' என்று சொல்லிக் கொண்டான். மனைவியின் நடத்தையால் அவனுக்கு ஏற்பட்ட அவமானம் மிகப் பெரிய காட்டுத் தீயை மூட்டி விட்டது. அது அவனை மட்டும் சுடவில்லை. அவனுடைய குணங்கள், அவன் வைத்திருந்த நம்பிக்கைகள், அவன் முன் உதாரணமாகக் கொண்டிருந்த உத்தம பாத்திரங்கள், அவன் உருவாக்கிக் கொண்டு வந்த ஒரு தார்மீக வாழ்க்கை — இப்படி எத்தனையோ அந்தத் தீயில் கிடந்து கருகிக் கொண்டிருந்தன. அவன் தனக்காகக்கூட வருந்தாமல், இந்தப் பெரு நாசத்துக்காகவே புழுவாகத் துடித்தான். இனி உலகத்தில் எதை நம்புவது ? உலகத்தில் இனி கடைப்பிடிக்கத்தக்க தர்மம் எங்கே இருக்கிறது ?

ஒரு கட்டத்தில் ரங்கராஜனுக்கு அவன் தாயினிடமே கோபம் வந்தது. உலகத்தில் உள்ள அத்தனை பேரிலும் அவள் ஒருத்திதான் தனக்குக் கேடு செய்தவளைப்போல் அவனுக்குத் தோன்றினாள். அவனுடைய அன்பையும் இரக்கத்தையும் பார்த்துப் பார்த்துத் தன் உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டு வந்ததன் விளைவாகத்தான் இப்பொழுது இந்த மாதிரியான ஒரு நிலை ஏற்பட்டுவிட்டதாகவும் கருதினான்.

ஒரே கணத்தில் சித்தப்பா நல்லவராகி விட்டார். அவருடைய புத்திமதிகள் எல்லாம் அசைக்க முடியாத அனுபவ உண்மைகள் ஆகிவிட்டன. அவனிடத்தில் அன்பு கொண்டிருந்த அனைவருமே அவனுடைய இரக்க சுபாவத்தைக் கண்டனம் செய்தார்கள் அல்லவா? முத்துக்குமார், சித்தப்பா, விஜயா, ஏன், மாடசாமிகூட அளவுக்கு மீறிய தன் இரக்க சுபாவம் குறித்து எச்சரிக்கை செய்தார்கள். அவர்கள் ஒருவர் பேச்சைக்கூடப் பொருட்படுத்தாமல், தாயாரிடம் கற்ற தர்மத்தை — இன்னும் அது தர்மம் தானா? — கடைப்பிடித்து... என்ன ஆயிற்று இப்பொழுது ?

ரங்கராஜனுடைய மனத் தகிப்பில், அந்தப் பிரம்மாண்டமான காட்டுத் தீயில் அவனுடைய வாழ்க்கையின் பற்றுக் கோடே எரிந்து விட்டது. அன்பே மனித வாழ்க்கை என்று அதையே கொழுகொம்பாகப் பற்றிப் பிடித்திருந்தான். இப்போது கொழு கொம்பே பற்றி எரிந்து விட்டது என்கிற நிலையில், அவனுக்குத் திசையே தெரியவில்லை. எந்தப் பக்கம் போவது எதை ஏறிட்டுப் பார்ப்பது, என்ன செய்வது — ஒன்றுமே புரியவில்லை.

மூர்ச்சை தெளிந்த அன்று இரவு அவன் சமையற்காரக் கிழவியிடம் போய், அரை நிமிஷம் பேசினான். இரண்டொரு வார்த்தைகள்தான் :

''பாட்டி ! நாளைக்கு அப்பாவும் அம்மாவும் வருவாங்க. இதைப் பற்றி நீ ஒரு வார்த்தை சொல்லக் கூடாது.''

கிழவியும் இன்னும் மனக் கலவரம் நீங்காத நிலையில், ''சொல்ல மாட்டேன் ஐயா, சொல்ல மாட்டேன்!'' என்று கதறினாள்.

''சத்தியமாகச் சொல்ல மாட்டியே?''

''சத்தியமாகச் சொல்ல வில்லை'' என்று சொல்லி விட்டுக் கிழவி வீறிட்டு அழுதாள்.

ரங்கராஜன் உடனே வெளியே போய் விட்டான். அந்த நாளிலிருந்தே அவன் மனைவியோடு பேசவில்லை.

# அந்நிய மண்ணில் இந்திய கோஷங்கள்!



"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்-மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்!" என்றார் லண்டனில் உள்ள இந்தியப் புத்தகக் கடைக்காரர்.

"உண்டி கொடுத்தோர், உயிர் கொடுத்தோரே!" என்றார் கவன்ட்ரி இந்தியப் பள்ளி ஆசிரியர்.

"தனியொருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்!" என்று முழக்கம் செய்தார் கிளாஸ்கோ தொழிற்சாலையில் உள்ள இந்தியத் தொழிலாளி.

இத்தனை பேரும் சேர்ந்து அன்னிய மண்ணில் எதற்கு இப்படி வெறும் கோஷங்களை எழுப்புகிறார்கள் என்று திகைக்கிறீர்களா? 69ம் பக்கம் பாருங்கள்!

---

அவள் இருக்கும் திசையில் கூடத் திரும்பிப் பார்க்கவில்லை.

தங்கத்தின் கல்யாணத்துக்குப் போயிருந்தவர்கள் திரும்பி வந்து சேர்ந்தார்கள். அத்துடன் வேறு ஒரு செய்தியும் அவனுக்குக் கிடைத்தது, முத்துக்குமார் மூலம்.

"திருப்பரங்குன்றத்தில் விஜயாவுக்குக் கல்யாணம்" என்பதுதான் அவனுக்குக் கிடைத்த அந்தப் புதுச் செய்தி. முத்துக்குமாரைச் சந்தித்துப் பேசிவிட்டு இந்தச் செய்தியை அறிந்ததும் அதன் பாரத்தைத் தாங்கவே முடியாமல் திக்குமுக்காடிக் கொண்டு அவன் வீட்டை நோக்கி நடந்து வரும்போது, அரசடி விநாயகர் கோயில் பக்கம் ஒரு சிறு கூட்டம் கூடியிருந்தது. அதை அவன் கவனித்துப் பார்த்தான். கூட்டத்தின் இடைவெளிகளின் வழியே உற்றுப் பார்க்கும்போது, கீழே ஒருவன் படுத்துக் கிடப்பது தெரிந்தது. என்னவோ ஏதோ என்று கலவரப்பட்டுக் கொண்டு, அங்கே நின்றவர்களைக் கேட்டான்:

"இங்கே ஒரு பைத்தியக்காரன் திரிந்து கொண்டிருந்தானில்லே, அவன் செத்துப் போயிட்டான்" என்று ஒருவன் சொன்னான்.

"செத்துப் போயிட்டானா!" என்று சொன்ன ரங்கராஜன் கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே புகுந்து குனிந்து பார்த்தான். அதே பைத்தியக்காரன்தான். அத்தனை பேரிலும் அவன் ஒருவன்தான் அவன் மரணத் துக்காகத் தாங்க முடியாத துக்கத்தை அடைந்தவன். சடலத்தின் முகத்தைக் கூர்ந்து பார்க்கும்போது அவனுக்கு அம்மாவின் ஞாபகம் வந்தது. அம்மா ஊரில் இல்லாத — சாத்தூருக்குக் கல்யாணத்துக்குப் போயிருந்த நாட்களில் — அவன் தன் வீட்டுக்கு வந்து பேசாமல் திரும்பிப் போனதும், அம்மா மதுரைக்கு வந்த பிறகு அவன் வராததும் ஞாபகத்துக்கு வந்தன. பட்டினியால்தான் அவன் செத்திருக்கிறான். இன்னும் சொல்லப் போனால், அம்மா ஊரில் இல்லாததால்தான் அவன் செத்திருக்கிறான்.

ரங்கராஜன் கூட்டத்தை விட்டு வெளியே வந்தான். அநாதைப் பிரேதத்தைக் கொண்டு போய்ப் புதைப்பதற்காக அங்கே நின்றவர்கள் வேகமாக ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தான். வீட்டுக்குத் திரும்பி விட்டான்.

அவன் வரும்போது வீட்டில் நிர்மலா தலைவலியோடு படுத்துக் கிடந்தாள். ஞானகியம்மாளே அவளுக்கு அருகில் உட்கார்ந்து சிசுருஷை செய்து கொண்டிருந்தாள். இந்தக் கட்டத்தில் அங்கே கலங்கிய கண்களோடு வந்த ரங்கராஜன், "அம்மா!" என்று அழைத்தான். உடனே தரையில் உட்கார்ந்து அவள் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழுது கதறினான்.

"என்ன ராஜா?" என்று பதறிப் போய்க் கேட்டாள் ஞானகியம்மாள்.

நடராஜ முதலியார் அவனுடைய அழுகுரலைக் கேட்டு ஓடி வந்தார்.

நிர்மலாவும் பயந்து போய் எழுந்து உட்கார்ந்தாள்.

"அந்தப் பைத்தியக்காரன் செத்துப் போயிட்டானம்மா...."

"போயிட்டானா ராஜா? எப்போ?" என்று கேட்டுக் கொண்டே ஞானகியம்மாள் கண்ணீரைச் சிந்தினாள்.

ஓர் அடைக்கலப் பொருள் போய் விட்டது என்ற துக்கம் அவளுக்கு. அவனுக்கோ, ஆயிரம் வேதனைகள். அத்தனையும் அந்த ஒரு துக்கத்தை வியாஜமாகக் கொண்டு அவனை வதைத்தது. எல்லாவற்றுக்கும் சேர்த்து அப்போது கோவென்று அழுது கதறினான். அடக்கி வைத்திருந்த துயரங்களெல்லாம் கண்ணீராக வெளிப்பட்டன. அவன் தலையைத் தடவிக் கொடுத்து, அவனுக்கு ஆறுதல் சொல்

# காலைப் புத்துணர்ச்சியை மாலை வரை நீடிக்கச் செய்யுங்கள்!

காலையில் குளித்தபின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடலில் தூவிக் கொண்டால் புத்துணர்ச்சி மணிக்கணக்கில் நீடித்திருக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மையுடைய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் கடுங்கோடையில் கூட உங்களை இதமான உணர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் இருக்கச்செய்யும். உங்கள் உடலைத்தழுவி நிற்கும் ட்ரீம்ஃப்ளவர் நறுமணம் உங்களைச் சூழ்ந்துள்ளவர்களை மகிழ வைக்கும். எல்லா காலநிலைகளுக்கும் ஏற்றதாகையால் வருடம் பூராவும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்!




## பாண்ட்ஸ்

ட்ரீம்ஃப்ளவர் டால்க்—
மென்மை மிக்க மகோன்னத டால்க்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

வித் தேற்ற முனைந்தாள் ஜானகியம்மாள்.

நிர்மலாவுக்குத் திகைப்பினால் மூளையே குழம்பியது. தான் செய்த பிரும்மாண்டமான தவற்றையும் மறந்து ஒரு பைத்தியக்காரனின் மரணத்துக்காகத் தன் கணவன் அழுது துடிப்பதைப் பார்க்கப் பார்க்க அவளுக்குக் குழப்பம் அதிகமாகித் தலையும் சுற்றியது. அவளுக்காகவும் சேர்த்துத்தான் அவன் அழுகிறான் என்பது அந்த ஜன்மத்துக்குப் புரியவில்லை. தலைவலி பொறுக்காமல் படுத்துக் கொள்பவள் போல் கட்டிலில் சாய்ந்து விட்டாள். அன்றிரவு அவளுக்கு உண்மையிலேயே தலைவேதனை அதிகமாகி விட்டது. இரவெல்லாம் முனகிக் கொண்டு கிடந்தாள். நள்ளிரவு தாண்டியும்கூட அவளுக்கு அருகில் அமர்ந்து பணிவிடை செய்து கொண்டிருந்தாள் ஜானகியம்மாள்.

ரங்கராஜன் தன் மனைவியை ஒரு முறை திரும்பிப் பார்த்து விட்டுப் பேசாமல் போய்ப் படுத்துவிட்டான்.

* * *

மறுநாள் காலையில் அவன் விழித்து எழுந்த போது, பைத்தியக்காரனின் சாவோ, மனைவியின் தலைவலியோ நினைவுக்கு வரவில்லை. ராமலிங்கம் பிள்ளையைப் பற்றி எப்படியோ ஞாபகம் வந்தது. மனத் துயரம் மிகுந்த வேளையில் அவருடைய நினைவு வந்தது தெய்வத்தின் அநுக்கிரகமாகத்தான் இருக்க வேண்டும் என்று அவன் நினைத்தான். அவரைத் தவிர இந்தப் பரந்த உலகத்தில் தனக்கு மனித உருவில் வேறொரு ரட்சகர் இருக்க முடியாது என்று கருதினான். அவரை அன்றே போய்ப் பார்த்தால்தான் தனக்கு ஏதேனும் ஒளி தெரியும் என்று முடிவு கட்டினான்.

பத்தரை மணிக்குப் புறப்பட்டுப் போனான் ரங்கராஜன். அவர் ஆபீசில் இல்லை என்பதோடு, அன்று அவர் வரமாட்டார் என்றும் அங்கே உள்ள சிப்பந்திகள் தெரிவித்தார்கள். மகளின் திருமணத்துக்கு இரண்டு நாட்களே இருக்கும்போது அவர் எப்படி ஆபீசுக்கு வருவார்? இதுகூடத் தெரியாமல் வந்துவிட்ட தன் பைத்தியக்காரத்தனத்தை அவன் உணர்ந்தாலும் அவனுடைய ஏமாற்றம் நீங்கவில்லை. அப்போது திடீரென்று மழையும் பிடித்துக் கொண்டது. வேறு வழியில்லாமல் அங்கேயே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். சிப்பந்திகள் அனைவருமே அவனை இதற்கு முன்னால் பார்த்திருக்கிறார்கள். அவனை ராமலிங்கம் பிள்ளை வரவேற்றதையும் தம் காரில் அழைத்துச் சென்றதையும் அவர்கள் பார்த்திருந்தபடியால், அவனை ஒரு முக்கியஸ்தனுக்க் கருதினார்கள். ஒருவர் அவன் அருகே வந்து, "ஏதாவது முக்கியமான காரியமாய் இருந்தால் முதலாளிக்குப் போன் பண்ணலாம். தகவல் கொடுக்கட்டுமா? உங்கள் பேர்?" என்று கேட்டார்.

"முக்கியமான காரியம் ஒண்ணுமில்லை. சும்மாதான் பார்த்துவிட்டுப் போகலாம்னு வந்தேன். போன் ஒண்ணும் பண்ண வேண்டாம்" என்றான் ரங்கராஜன்.

"பரவாயில்லை. உங்க பேரைச் சொல்லுங்கள்."

" வேண்டாமே! மழை விட்டதும் போய்ட்டு நாலஞ்சு நாட்கள் கழிச்சு வர்றேன்."

"எதுக்கும் உங்க பேரைச் சொன்னால்......"

"ரங்கராஜன்."

"அப்படியா?" என்று சொல்லிவிட்டு அந்த ஆசாமி உள்ளே சென்றார். அவன் வந்ததை உடனே தெரிவிக்கா விட்டால், அதற்காக முதலாளி ஒருவேளை கோபப்படவும் கூடும். எதற்கும் போன் பண்ணிவிட்டால் நல்லது என்று கருதி அவர் உள்ளே போய், ராமலிங்கம் பிள்ளையைப் போனில் அழைத்து ரங்கராஜன் வந்திருப்பதைத் தெரிவித்து, அவன் போன் பண்ணத் தேவையில்லை என்று சொன்னதையும், தானாகவே வந்து போன் பண்ணுவதாகவும் சொன்னார்.

" அவரை அங்கேயே இருக்கச் சொல். நான் உடனே புறப்பட்டு வருகிறேன்" என்று பதில் வந்தது. இதை ஓடி வந்து அவர் ரங்கராஜனிடம் தெரிவித்தார். அவனுக்கு அவர் செய்த காரியம் கொஞ்சமும் பிடிக்கவில்லை. "அநாவசியம். வேண்டாம்னு சொன்னேன்" என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு சொன்னான்.

சில நிமிஷங்களுக்குள்ளாகவே மழையோடு மழையாக ராமலிங்கம் பிள்ளை காரில் வந்து இறங்கினார். அவரைத் தொடர்ந்து கலாவும் பின்னால் இறங்கி வந்தாள்.

ரங்கராஜன் உடனே எழுந்து நின்று வணங்கி, "என்னை மன்னிக்கணும்" என்று கெஞ்சினான்.

"எதுக்காக?" என்று அவர் சிரித்துக் கொண்டே கேட்டார். அவனைத்

தோளோடு தோள் கட்டிப் பிடித்துக் கொண்டு உள்ளே அழைத்துச் சென்றார்.

ரங்கராஜனின் முகத்தைப் பார்த்ததும் கலாவுக்கு அதிர்ச்சியாக இருந்தது. அங்கே காணப்பட்ட வாட்டமும் வறட்சியும் அவளைப் பெரிதும் கஷ்டப்படுத்தி விட்டன. 'இவர் முகமா இப்படி ஆகிவிட்டது?' என்று ஒரு பெருமூச்சுடன் அவனைப் பார்த்தாள். 'இவருக்கு என்ன கஷ்டமோ? உடம்பு சரியில்லையா? இவருடைய செளகரியங்களை யாருமே கவனிக்காமல் விட்டு விட்டார்களா?' என்றெல்லாம் எண்ணி மறுகினாள்.

உள்ளே போய் அவள் மட்டும் உட்காராமல் நின்று கொண்டிருந்தாள். ரங்கராஜனின் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவளைக் கவனிக்காமல் ராமலிங்கம்பிள்ளை தம்முடைய கைப் பையிலிருந்து ஒரு கல்யாண அழைப்பிதழை எடுத்து ரங்கராஜனின் முன்னால் வைத்தார்.

"நீங்க எந்த மாதிரி மன நிலையில் இங்கே வந்திருப்பீங்க என்கிறதை யூகிக்கறதிலே கஷ்டம் ஒண்ணும் இல்லே. இப்போ நீங்க சந்தோஷமா வாழ்த்துச் சொல்லணும். விஜயா உங்க கல்யாணத்தன்னிக்குச் சுவாமி படத்துக்கு முன்னாலே ஒரு மணி நேரத்துக்கு மேலே உட்கார்ந்து, பிரார்த்தனை பண்ணினாள். உங்களுக்காக அம்பிகைகிட்டே அவள் என்னென்ன வரங்கள் கேட்டாளோ? அதே மாதிரி நீங்களும் வாழ்த்துவீங்கன்னு எனக்குத் தெரியும்... உங்க வீட்டுக்கு வேணும்னே நான் கல்யாணக் காகிதத்தை அனுப்பல்லே. அதுக்காக என்னைக் கோபிக்க வேண்டாம்....."

அவர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது ரங்கராஜன் தலையைக் குனிந்து கொண்டான். அவனை அறியாமல் அவன் கைகள் மேஜைக்கு மேல் நடுங்கிக் கொண்டே குவிந்தன. கலா தன்னை மறந்து கண்ணீர் முத்துக்களை உதிர்த்துக் கொண்டே நின்றாள். ஏதோ ஞாபகம் வந்தவர் போல் அவளைத் திரும்பிப் பார்த்த ராமலிங்கம்பிள்ளை, "கலா! என்ன இது? உட்கார்! அழைப்புக் கொடுக்காவிட்டால் என்ன? இவரும் கல்யாணத்துக்கு வராமல் இருந்தால்தான் என்ன? இதிலெல்லாம் ஒண்ணுமில்லே. கொஞ்ச காலம் இப்படிக் கழியட்டும். அப்புறம் பழைய உறவைப் போல் ஆயிரம் மடங்கு நெருக்கமாகப் பழகப் போகிறோம். விஜயாவுக்கு இவருடைய மனைவி சொந்தச் சகோதரியாகவே ஆகப் போகிறாள் என்பது எனக்குத் தெரியும். நீ அந்த அம்மாவைத் தினமும் போய்ப் பார்க்கலாம்...." என்றார்.

கல்யாணக் கடிதத்தை அவன் படித்தே பார்க்கவில்லை. அவர் அதை எடுத்து மீண்டும் தமது பையில் வைத்துக் கொண்டார். கலாவுக்கு அந்தக் கொடுமையைத் தாங்க முடியவில்லை.

"அழைப்புக் கொடுக்கவே போறதில்லையா?" என்று அவள் கேட்டாள்.

"கலா! எனக்கு உங்க அப்பா அழைப்புக் கொடுக்காமல் இருந்திருந்தால் இன்னிக்கு நான் இங்கு வந்திருக்கவே மாட்டேன். நான் நினைக்கிறப்போ எல்லாம் என்னை அழைக்கிறார்னு உனக்குத் தெரியாது, கலா" என்றான் ரங்கராஜன். அவன் மனக் கட்டுப்பாட்டை இழந்து, அழுதுவிடக் கூடிய நிலைக்கும் வந்து விட்டான். அவனுடைய மனைவியின் முகம் அன்று கண்ட அந்த முகம் — ஞாபகத்துக்கு வந்தது. "விஜயாவுக்கு வாழ்த்துச் சொல்ல எனக்குத் தகுதியே இல்லை" என்று சொன்னான். உடனே எழுந்து நின்று, "தகுதியில்லாமலே, வாழ்த்துச் சொல்றதுக்கு வந்தது என்னுடைய தவறு. மீனாட்சியம்மன் இருக்கிறாள் விஜயாவுக்குத் துணையாக. நீங்க இருக்கிறீங்க. அவளுடைய உத்தமமான கணவர் இருக்கிறார். நான் யார் வாழ்த்துச் சொல்றதுக்கு? அம்பாள் துணை செய்யட்டும்" என்று சொல்லி விட்டு அவரையும் கலாவையும் நோக்கி வணங்கி, "நான் வர்றேன்" என்று கூறிக் கொண்டு வெளியே வந்தான். அப்படியே போய் விட முடியவில்லை. மழை விடாமல் பெய்து கொண்டிருந்தது.

ராமலிங்கம் பிள்ளையும் கலாவும் வெளியே வந்தார்கள்.

"காரில் ஏறிக்கோங்க. போகலாம். உங்களை வீட்டுலே விட்டுட்டுப் போகிறோம்."

"வேண்டாம். மழை விட்டதும் நானாகவே போயிட்றேன். நீங்க போய்ட்டு வாருங்க."

ரங்கராஜன் பழைய காதலை நினைத்து ஏங்கித் தவிக்கிறான் என்றும், விஜயாவின் கல்யாணச் செய்தியை அவனால் தாங்கவே முடியாமல் இருக்கிறது என்றும் கருதிய ராமலிங்கம் பிள்ளைக்கு அவன் மீது அப்போது கோபம்கூட வந்து விட்டது.

"ஸார்! வாருங்கள் போகலாம்" என்று கண்டிப்பாகச் சொன்னார்.

அவர். அந்த ஒரே வாசகம் அவனைக் காரை நோக்கி இழுத்துச் சென்றது.

''இந்தப் பலஹீனம் வேண்டாம். உங்களைப் பார்க்க எனக்கு ஆச்சரியமா இருக்கு. மனப்பூர்வமா நீங்க விஜயாவை வாழ்த்துவீங்கன்னு எதிர் பார்த்தேன்.''

'' விஜயாவை வாழ்த்தறதோட மட்டுமில்லே, வணங்கவும் செய்கிறேன். நான் அவளை நினைச்சுப் பலவீனம் அடையல்லே. சத்தியமாச் சொல்றேன் '' என்றான் ரங்கராஜன்.

''உங்களை ரொம்பக் கஷ்டப்படுத்திட்டேன். நான் இன்னமே ஒண்ணும் பேசல்லே. கொஞ்ச நாட்கள் கழிச்சுச் சந்திப்போம் '' என்றார் ராமலிங்கம் பிள்ளை.

ரங்கராஜனை அவனுடைய வீட்டு வாசலில் கொண்டு வந்து அவர் இறக்கி விட்டார். கண்ணாடி மறைப் பையும் மழையையும் ஊடுருவிக் கொண்டு அவனுடைய வீட்டை எட்டிப் பார்த்தாள் கலா.

ஒரு தடவை பெருமூச்செறிந்து விட்டுக் கண்ணீர் வடித்தாள்.

மழையில் நனைந்து கொண்டே அவன் வணக்கம் சொல்லி விட்டுச் சாவதானமாகப் படியேறி வீட்டினுள் நடந்து சென்றான்.

## அத்தியாயம் 11

நிர்மலாவின் தலைவலி அதிகமாகிக் கொண்டே வந்தது. வாரத்துக்கு இரண்டு நாள் அல்லது மூன்று நாள் தலைவலியாக இருந்தது போய், நாள் தவறாமல் அது வந்து துன்பப்படுத்த ஆரம்பித்து விட்டது. சில நாட்களில் இரவும் பகலும் ஓயாத வேதனைக்கு உள்ளாகிச் சாப்பாடோ தூக்கமோ இன்றி அவதிப்பட்டாள். ரங்கராஜன் முன்பு செய்ததைப் போல் ஓடி ஓடிப் போய் டாக்டரை இப்போது அழைத்துக் கொண்டு வருவதில்லை. வாங்கி வைத்த மருந்து மாத்திரைகளும், தைலமும் காலியாகட்டும், அப்புறம் பார்க்கலாம் என்று பேசாமல் இருந்தான். அந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவன் ஒரு நாள்கூட மனைவியின் அருகில் வந்து உட்காரவில்லை. தூரத்திலிருந்துகூடத் திரும்பிப் பார்க்கவில்லை. பெரும்பாலான நேரம் வீட்டில் அவன் இருப்பதும் இல்லை.

அவள் வேதனையால் துடிக்கும்போது அவன் பாராமுகமாக இருப்பதைப் பார்த்த ஜானகியம்மாளுக்கு என்னவோ போல் இருந்தது. 'கணவன் மனைவிக்குள் ஏதாவது பிணக்கு இருக்கும். அதெல்லாம் சகஜம். அதற்காக அவளைத் திரும்பியே பார்க்காமல் இருப்பதா? ரங்கராஜனுக்கு இப்படி மனம் கல்லாக மாறியது எப்படி ?' என்றெல்லாம் நினைத்த அந்த அம்மாள் ஒரு நாள் அவனைப் பார்த்து, ''ராஜா அவள் கஷ்டப்படறதைப் பார்த்துக்கிட்டுப் பேசாமல் இருக்கிறயே ? டாக்டரைக் கூட்டி வரப் படாதா?'' என்று கேட்டாள்.

''என்ன பிரயோஜனம்? டாக்டர் ஆயிரம் தடவை வந்து போய்விட்டார். அவருக்கே இந்த நோயின் காரணம் தெரியவில்லே. என்ன செய்யச் சொல்லறே ?'' என்று சொல்லி விட்டு, அவன் மேற்கொண்டும் பேச விரும்பாமல் போய் விட்டான்.

இதெல்லாம் நிர்மலாவுக்குத் தெரியாது. தன் கணவன் தன்மீது இன்னும் கோபமாக இருக்கிறான் என்று ஒரு சமயமும், கோபமாக இல்லை, ஆனால் சகித்துக் கொண்டு பொறுமையாக இருக்கிறான் என்று இன்னொரு சமயமும் அவள் நினைத்தாள். தான் செய்த துரோகத்தைக் கணவன் தன் பெற்றோர்களிடம் சொல்லவில்லை என்பது அவளுக்கு அன்றுட நிகழ்ச்சிகளிலிருந்தே புரிந்து விட்டது. 'ஏன் சொல்ல வில்லை ? என்னை மன்னித்து விட்டாரா?... அப்படியென்றால் என்னை ஏன் திரும்பிக் கூடப் பார்க்காமல் இருக்கிறார்?'

அவள் ஒரு சந்தர்ப்பத்துக்காக இரவும் பகலும் காத்துக் கொண்டிருந்தாள். யாரும் பக்கத்தில் இல்லாத சமயத்தில் அவன் தன் அருகில் வந்து நிற்க வேண்டும். உடனே எழுந்து அவன் காலில் விழுந்து, ''இனி மேல் நான் தப்புச் செய்ய மாட்டேன். எனக்குக் கல்யாணமே ஆகப் போவ இல்லை என்று நான் நினைத்துக் கொண்டிருந்த சமயத்தில், ஒரு நாள் தற்கொலை செய்து கொள்ளக்கூடத் துணிந்தேன். அப்போதுதான் பக்கத்து வீட்டுச் சிவலிங்கத்துக்கும் எங்கள் வீட்டுக்கும் தொடர்பு ஏற்பட்டது. என்னைப் பார்த்ததுமே அவர் ஆசைப்பட்டார். முதலில் நான் அதற்கெல்லாம் மனம் இசையாமல் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்பதிலேயே குறியாக இருந்தேன். சிவலிங்கம் அடிக்கடி எங்கள் வீட்

டுக்கு வரவும் பண உதவி செய்யவுமாக இருந்தார். என் மனமும் மாறி விட்டது. கல்யாணமே ஆகப் போவதில்லை என்ற நிலையில் அவரோடு சந்தோஷமாக இருந்து வாழ்க்கையை அநுபவிக்க ஆசைப்பட்டு விட்டேன். கொஞ்ச நாட்களில் என் தாயாரும் எனக்கு இந்த விஷயத்தில் ஆதரவு காட்டத் தொடங்கினுள். இப்படி ஒரு வருஷம் அவருக்கு ஆசைநாயகியாக இருந்திருப்பேன். அப்போதுதான்.... நீங்கள் என்னைக் கல்யாணம் செய்து கொள்ள முன்வந்தீர்கள். நானும் தாங்க முடியாத சந்தோஷத்துடன் சம்மதித்தேன். சிவலிங்கமும் சந்தோஷப்பட்டார். ஆனல்.... என் பழைய தொடர்பில் எப்படியோ எனக்குக் கவர்ச்சி உண்டாகி, இந்த மகா பாதகத்தைச் செய்து விட்டேன். அவர் பாவத்துக்குக்கூடப் பயந்தார். நான்தான் என்னையும் கெடுத்து, அவரையும் கெடுத்து உங்களுக்குத் துரோகம் செய்தேன். என்னை மன்னிப்பீர்களா ?'' என்றெல்லாம் கதற வேண்டும் என்று அவள் காத்துக் கொண்டிருந்தாள்.

அவள் எதிர்பார்த்த அந்தச் சந்தர்ப்பம் வரவே இல்லை என்பதோடு, அவளும் நாளாவட்டத்தில் அதற்காகக் காத்திருப்பதையும் கைவிட்டாள். அவளுடைய தலைவேதனை மற்ற எதையுமே பின்னுக்குத் தள்ளிவிட்டது.

சில நாட்களுக்குப் பிறகு ரங்கராஜனுடைய பாராமுகம் அவளுக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணியது. தன்னை வாழ்நாள் முழுவதற்கும் வீட்டினுள்ளேயே ஒதுக்கி வைத்திருப்பதைவிடத் தன்னை வெளியே விரட்டி விட்டாலும்கூட நல்லது என்று கருதினுள். ஒதுக்கப்பட்டு வாழும் அந்த நிலையை அவளால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை.

கடைசியில் நிர்மலாவின் புத்தி தலைகீழாக மாறுட்டம் அடைந்து விட்டது. சிவலிங்கத்தை அடிக்கடி நினைத்தாள். அவனைப் பார்க்க வேண்டும் என்ற தாகமும் உண்டாயிற்று. ரங்கராஜனை நினைக்கும்போதே கோபாவேசமும், வெறியும் கிளம்பியது. தலைவலியும் உச்சத்தை அடைந்துவிட்டது. வெறி பிடித்துப் போய்த் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டு, ''ஏ, பொட்டை மூஞ்சி!.... ஏ.... சனியனே !..... பாழாப் போறவனே...!'' என்று நள்ளிரவு வேளையில் வீடே அலறும்படி கத்தி விட்டாள். எல்லோரும் ஓடி வந்து பார்த்தார்கள். நிர்மலா வெறிக் கோலத்தோடு ஒவ்வொருவரையும் பாய்ந்து கடிக்கப் போகும் மிருகத்தைப் போல் மூச்சு வாங்கிக் கொண்டு இங்கும் அங்கும் பாய்ந்தாள். கடைசியில் கீழே தடால் என்று விழுந்து கையையும் காலையும் உதறினுள்.

அவள் அருகில் நிற்கவே பயமாக இருந்தது.

''ராஜா! போய் டாக்டரைக் கூட்டி வாடா. இவளுக்குப் புத்தியே பேதலிச்சிட்டுதுடா'' என்ருள் ஜானகியம்மாள்.

ரங்கராஜன் அந்த நிசி வேளையில் ஓடிப் போய் டாக்டரை அழைத்துக் கொண்டு வந்தான்.

நிர்மலாவின் கூக்குரலையும், வெறியையும் பார்த்த டாக்டர், முதலில் அது வேதனை மிகுதியால் ஏற்பட்ட சித்தப் பிரமையாக இருக்குமோ என்று கருதினர். ஆனல் அவளுடைய அளவுகடந்த வெறிக்கூச்சலைப் பார்த்து விட்டு, 'வேறு ஏதோ கோளாறு ; மூளைக் கோளாருகவே இருக்கலாம்' என்று நினைத்து ரங்கராஜனைப் பார்த்து ''ஸார், உடனே கொண்டு போய் ஆஸ்பத்திரியில் சேர்த்துவிடணும். தாமசம் பண்ண வேண்டாம் '' என்ருர்.

''அப்படியா?'' என்று கேட்டான் அவன்.

''ஆமாம். இப்போ என்னுலே எதுவும் செய்யறதுக்கில்லே. இது 'ஓவரா' இருக்கு'' என்று சொல்லி விட்டு, தம்முடைய காரிலேயே அவளை ஏற்றிக் கொண்டு போகலாம் என்று சொன்னர். அவர் சொல்வதைச் செய்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போய் விட்டது.

இரவு ஒரு மணி இருக்கும். அவளுடைய வாயை இறுகப் பொத்தி மூடிக் கொண்டு ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். அங்கே போய்ச் சம்பந்தா சம்பந்தமில்லாமல் எதை எதையோ சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்த நிர்மலா, ரங்கராஜனைப் பார்த்ததும் ஆங்காரத்துடன் சீறி எழுந்து கத்தினுள். ''போ, போ'' என்று அவனை அடிக்க வருபவளைப் போல் கையை ஓங்கினுள். ஆஸ்பத்திரி டாக்டர்கள் ரங்கராஜனைப் பார்த்து, ''நீங்கள் எல்லோரும் வீட்டுக்குப் போய் விடுங்கள். இது ஏதோ மனக் கோளாறு. உங்களைப் பார்க்கும் போதெல்லாம் வெறி அதிகமாகிறது. போய் விடுங்கள்'' என்று ஆங்கிலத்தில் சொல்லி அனைவரையும் போகச் சொன்னுர்கள்.

'' நானுவது பக்கத்தில் இருக்கிறேனே'' என்ருள் ஜானகியம்மாள்.

# ஒருவரும் அடாத விலை கொடுக்க விரும்புவதில்லை...

ஆகவே நீங்கள் அடித்துப் பேசி வியாபாரி உங்கள் விலைக்கு வர முயற்சிக்கிறீர்கள். சில சமயங்களில் வெற்றி பெறுவதுடன் சொற்ப பணமும் மிச்சப்படுத்துகிறீர்கள் — சந்தோஷம்தான். ஆனால் அது ஒரு அற்பகால வெற்றியே!

உங்கள் வரும் காலத்திற்காக நீங்கள் உங்களிடமே விலைபேச பழகவேண்டும். அனாவசியமான செலவுகளை சுருக்கி பணத்தை சேமியுங்கள்.

உங்கள் பணத்தை வளர்த்து, சந்தோஷமான எதிர் காலத்துக்குவழிகாட்ட யூகோ பாங்கில் உங்கள் பணத்தை சேமியுங்கள்.




தலைமை காரியாலயம்:
கல்கத்தா-1




நீங்கள் பணம் சேமிக்கலாம்.
யுகோ பாங்க் உங்களுக்கு
உதவி செய்ய முடியும்.

செப்டம்பர் 25 முதல்

சென்னை,

கெயிட்டி · அகஸ்தியா · நூர்ஜஹான்

மற்றும் தென்னாடெங்கும்

மாடர்ன் தியேட்டர்ஸ்

# நான்கு கில்லாடிகள்

டைரக்ஷன் L. பாலு



அதற்கு டாக்டர்கள் சம்மதிக்க வில்லை. எல்லோரையும் அனுப்பிவிட்டார்கள். ரங்கராஜனின் குடும்ப டாக்டரின் காரிலேயே எல்லாரும் வீடு திரும்பினார்கள்.

ஆஸ்பத்திரியில் சேர்த்த மூன்று நாட்களுக்குள்ளாகவே நிர்மலாவின் தலைவலிக்கும் சித்தப் பிரமைக்கும், என்ன காரணம் என்பதை டாக்டர்கள் கண்டு பிடித்து விட்டார்கள்.

நிர்மலாவுக்கு மூளையில் புற்று நோய்.

மண்டை ஓட்டைப் பெயர்த்து எடுத்து ஆபரேஷன் செய்ய வேண்டும்.

நோய் முற்றியிருந்தால் பிழைப்பது பற்றி உத்தரவாதம் கொடுக்கமுடியாது.

இந்த முடிவு தெரிந்ததும் திண்டுக் கல்லுக்குத் தகவல் கொடுத்தான் ரங்க ராஜன். நிர்மலாவின் தாயாரும் தமையனும் ஓடி வந்தார்கள்.

நான்காம் நாள் அறுவைச் சிகிச்சை நடந்தது. மண்டை ஓட்டை மீண்டும் பொருத்திப் படுக்க வைத்தார்கள். அன்று இரவுதான் அவள் உயிரோடு இருந்தாள். சூரியோதயத்துக்கு முன்பே நிர்மலா இறந்து விட்டாள்.

காலை ஏழு மணிக்குச் சுபாவமாக ஆஸ்பத்திரிக்குப் போன ரங்கராஜன், நிர்மலாவின் பிணத்தைத்தான் பார்த்தான். மௌனமாக ஐந்து நிமிஷங்கள் நின்று பார்த்தான். தன் இரண்டு கைகளையும் இறுகப் பிடித்துக்கொண்டு குனிந்த தலையோடு வெளியே வந்தான். வீட்டுக்கு வந்து பெற்றோர்களிடம் சன்னமான குரலில், ''அவள் போயிட்டாள்'' என்று சொன்னான்.

பெற்றோர்களும், நிர்மலாவின் தாயும் தமையனும் திடுக்கிட்டார்கள். நடராஜ முதலியாரையும், சமையற்காரியையும், ரங்கராஜனையும் தவிர அனைவரும் கூக்குரலிட்டு அழுதார்கள். ரங்கராஜன் எல்லோரையும் ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட்டு முத்துக்குமாரைத் தேடிப் போனான். அவனிடம் செய்தியைச் சொன்னான். உடனே அவனும் ரங்கராஜனுடன் ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டு வந்தான். கால தாமதம் செய்யாமல் சடலத்தை வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள்.

''இது ராமலிங்கம்பிள்ளைக்குத் தெரியுமா? சொன்னீர்களா ?'' என்று கேட்டான் முத்துக் குமார்.

''எதுக்காகச் சொல்லறது ?'' என்றான் ரங்கராஜன்.

அவனைக் கேட்காமலே முத்துக் குமார் ஓடிப் போய் ராமலிங்கம்பிள்ளைக்குப் போன் பண்ணி விட்டான்.



## காரியதரிசியும் உண்டு!

மேற்கு பெர்லின் நகருக்கு உத்தியோக ரீதியில் வரும் தொழில் வர்த்தகப் பிரமுகர்களுக்கு வசதியாக அந்நகரில் புதியதொரு ஹோட்டல் தொடங்கப்பட்டிருக்கிறது. பத்து மிலியன் மார்க்குகள் செலவில் உருவாகியுள்ள இதற்கு ''ஆபீஸ் ஹோட்டல்'' என்று பெயர். இந்த ஹோட்டலில் உள்ள விசாலமான அறைகள் ஒவ்வொன்றிலும் கட்டில் - படுக்கை தவிர ஒரு ஆபிஸை நன்றாக நடத்துவதற்குத் தேவையான எல்லா உபகரணங்களையும் தயாராக வைத்திருக்கிறார்கள். டைப்ரைட்டர், டெலிபோன், பேனா, பேப்பர், பைல்கள், டெலிவிஷன், ரேடியோ இத்யாதி பொருள்களுடன் அழகில் சிறந்தவளும் திறமைமிக்கவளுமான ஒரு காரியதரிசியும் உண்டு!

— ஜெர்மன் இன்டர்நேஷனல்

---

சிறிது நேரத்திலேயே அவருடைய கார் வந்து நின்றது. காரிலிருந்து அவரும் அவருடைய மனைவியும், விஜயாவும், அவள் கணவனும், கலாவும் இறங்கி வந்தார்கள். பெண்கள் இருவரும் ஜானகியம்மாளைக் கட்டிக் கொண்டு அழுது கதறினார்கள். ரங்க ராஜனைப் பார்க்கும் போதெல்லாம் அவர்களுடைய துயரம் பொங்கிப் பொங்கி எழுந்தது.

விஜயாவுக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம் கழித்து எல்லோருமே ரங்க ராஜனின் வீட்டுக்குப் போகலாம் என்று ராமலிங்கம் பிள்ளை முடிவு செய்து வைத்திருந்தார். ஆனால் இரண்டே மாதங்களில் இரு குடும்பங்களும் வந்து இப்படிச் சந்திக்கும்படி ஆகிவிட்டது. அவர் ரங்கராஜனை அரவணைத்துக் கொண்டு ஆறுதல் தந்தார். ரங்கராஜன் குனிந்த தலை நிமிரவில்லை. யாரையும் பார்க்கவில்லை. கண்ணீர் வடிக்கவோ ஒரு வார்த்தை பேசவோ செய்யாமல் கையைக் கட்டிக் கொண்டு நின்றான்.

நடராஜ முதலியார் முத்துக் குமாரை அழைத்து, அருணாசல முதலியாரின் போன் நம்பரைக் கொடுத்து, சாத்தூருக்கு 'டிரங்க் கால்' போட்டுச் செய்தியை உடனே தெரிவிக்கச் சொன்னார். (தொடரும்)




''ஒரு நாளைக்கு ஓர் ஆப்பிள் சாப்பிட்டு வந்தால் வைத்தியரை நம் வீட்டு வாசற்படியை மிதிக்காமல் செய்யலாம்'' என்பதாக ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. இந்தப் பழமொழியைப் படிக்கும்போது இந்த ஏழை நாட்டில் ஆப்பிளுக்கு எங்கே போவது? இந்த உஷ்ண நாட்டில் ஆப்பிள் எப்படி வளரும் என்றுதான் நம்மில் பலர் அங்கலாய்த்திருக்கிறோம்.

ஆனால், பாரத அன்னையோ, உலகிலுள்ள அத்தனை வித சீதோஷ்ண நிலைகளையும் தன் மடியில் வைத்துக் கொண்டிருக்கிறாள். அதை நல்லபடி பயன்படுத்திக் கொள்ள நாம்தான் தவறி விடுகிறோம்.

ஆப்பிள் வளரக்கூடிய சீதோஷ்ண நிலை பாரதத்தில் இருக்கிறது என்று நிரூபித்துக் காட்டிய பெருமை இந்த நாட்டில் கிறிஸ்துவ மதப் பிரசாரம் செய்ய வந்த ஓர் அமெரிக்கருக்கு வாய்த்தது.

காலஞ்சென்ற ஸாம்யூல் எவான்ஸ் ஸ்டோக்ஸ் என்ற அமெரிக்க மிஷனரி, 1912ல் ஹிமாசலப் பிரதேசத்தில் கோட்கர் என்ற ஊரில் குடியேறினார். அங்கு வாழ்ந்த பழங்குடி மலைஜாதியாரின் ஏழ்மை நிலையைக் கண்டார். அவர்களுக்கு மதப் பிரசாரம் செய்யுமுன் அவர்கள் வாழ்க்கையை வாழத் தகுந்ததாகச் செய்ய வேண்டும் என்று பாடுபடலானார். தாம் கிறிஸ்துவ மதத்தை வைத்துக் கொண்டு அம்மக்களிடம் சென்றால் தமது அந்தரங்க சுத்தமான சேவையில் அம்மக்களுக்கு நம்பிக்கை ஏற்படாது என்று தமது மதத்தைத் துறந்து ஹிந்து மதத்தை மேற்கொண்டார். தமது பெயரையும் சத்தியானந்த ஸ்டோக்ஸ் என்று மாற்றிக் கொண்டார். பிரியாதேவி என்ற ராஜபுத்திர ஹிந்துப் பெண்ணை மணந்தார்.

திரு ஸ்டோக்ஸ் தாம் வாழ்ந்து வந்த பகுதியின் சீதோஷ்ண நிலையும், அமெரிக்காவில் ஆப்பிள் வளரும் பிரதேசங்களின் சீதோஷ்ண நிலையும் ஒன்றாக இருப்பதைக் கண்டு, அமெரிக்காவிலிருந்து சில ஆப்பிள் வகைகளை வரவழைத்து நட்டுப் பயிர் செய்தார். நல்ல பலன் அளித்தது. இது 1930ம் ஆண்டு வாக்கில் நிகழ்ந்தது.

இதைக் கண்டு அந்தப் பகுதி மக்களும் ஆப்பிள் பயிர் செய்யத் தொடங்கினர். ஸ்டோக்ஸ் தமது பண்ணையில் ஆப்பிள் பயிர் செய்ததோடு ஆப்பிள் பயிர் பற்றி ஆராய்ச்சிகளும் நடத்தி வந்தார். அதன் பயனாக ஆசியாவிலே உள்ள நூற்றுக் கணக்கான ஆப்பிள் வகைகளில் மிகச் சிறந்த வகை ஹிமாசலப் பிரதேசத்தில் விளைகிறது என்ற நிலை ஏற்பட்டுள்ளது. அது மட்டுமல்ல, இந்த ஆண்டு பிரிட்டனுக்கு இருபது டன் ஆப்பிள்களை ஹிமாசலப் பிரதேச அரசாங்கம் அனுப்பி அந்நியச் செலாவணி சம்பாதித்திருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

சத்யானந்த ஸ்டோக்ஸ் துரையின் சேவையினால், ஹிமாசலப் பிரதேசத்தின் அப்பகுதியே மாறிவிட்டது. ஏழ்மையும் வறுமையும் தாண்டவமாடி வந்த இடத்தில் சுபிட்சமும் சந்தோஷமும் பொங்கி வழிகின்றன. குடிசைகள் எல்லாம் மறைந்து மாடிக் கட்டிடங்கள் எழுந்துள்ளன. ரேடியோ, டிரான்ஸிஸ்டர், ரேடியோகிராம் இப்படி எல்லாம் நவீன வசதிகளையும் அப்பகுதி மக்கள் பெற்று அனுபவிக்கக் கூடிய அளவுக்குப் பொருளாதார நிலை உயர்ந்து விட்டது. ஹிமாசல சர்க்கார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் 1000 ஏக்கர் நிலத்தில் ஆப்பிள் செடிகளைப் பயிர் செய்து வந்தார்கள். இன்று 85,000 ஏக்கர் நிலத்தில் பயிராகிறது. அடுத்த மார்ச்சுக்குள் இன்னும் 12,000 ஏக்கர் நிலப்பரப்பை ஆப்பிள் தோட்டமாக மாற்றத் திட்டமிட்டிருக்கிறார்கள். ஓர் ஏக்கர் ஆப்பிள் தோட்டம் இருந்தால் போதும். ஆண்டுக்கு 25,000 ரூபாய் வருமானம் கிடைக்குமாம்!

தனியார் தோட்டங்களும், சர்க்கார் தோட்டங்களும் சேர்ந்தால், சுமார், 4,98,000 ஏக்கரில் ஆப்பிள் மட்டும் பயிராகிறது! மலையாகக் குவியும் அளவுக்கு ஆண்டொன்றுக்கு 47,000 டன் ஆப்பிள் விளைகிறது. உலகின் பல பகுதிகளுக்கும் அனுப்பப்படுகின்றன.

ஆப்பிள் பழங்களைச் சும்மா விட்டு வைத்தால் விரைவில் கெட்டுவிடும். ஆகவே, அதை நீடித்த நாள் வைத்திருக்க ஹிமாசலப் பிரதேச அரசாங்கம், டில்லி உள்பட நான்கு ஊர்களில் குளிர்ப்பதனக் கிடங்குகள் கட்ட யோசனை செய்து வருகிறது.

இப்படிப் பித்தளையைப் பொன்னாக்கினாற் போல், ஹிமாசலப் பிரதேசத்தைத் தம் ரஸவாதத்தால் பொன் கொழிக்கச் செய்தவர் ஸத்யானந்த ஸ்டோக்ஸ். அவர் குடும்பத்தார் இன்றும் அப்பகுதி மக்களின் சுபிட்ச வாழ்வுக்குப் பணியாற்றி வருகிறார்கள். ஸ்டோக்ஸ் பெயரில், 'ஸ்டோக்ஸ் ஃபார்மர்ஸ் ஃபோரம்' (Stokes Farmers' Forum) என்ற ஆப்பிள் பண்ணை ஆராய்ச்சிக் கழகம் நடைபெற்று வருகிறது. அங்கு ஆப்பிள் சாகுபடி செய்பவர்களுக்கு யோசனைகளும் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. அந்தப் பகுதி பொது மக்கள் இன்றும் ஸ்டோக்ஸ் அவர்களை ''கோட்கர் காந்தி'' என்று நினைவு கூர்ந்து வருகிறார்கள்.

—எஸ். வி. எஸ்.

ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'

# வழித்துணை

தி. சா. ராஜு

ரயில் புறப்பட இன்னும் சில நிமிஷங்களே இருந்தன. வெளிக் கதவைத் திறக்க முயன்ற இளைஞனைத் தடை செய்தாள் தங்கம்மாள். 'இது பெண்கள் வண்டி தம்பி!' யுவன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். நடுத்தர வயதைக் கடந்து விட்டபோதிலும் அவளுடைய முகத்தில் பார்ப்பவர்களைத் தடுத்து நிறுத்தும் பொலிவு இருந்தது.

''இதில் ஏறப்போவதும் ஒரு பெண்தான் அம்மா!'' அவன் பணிவுடன் விடையிறுத்தான். இதற்குள் கூலியாள் ஒருவன் ஒரு ஸூட்கேஸையும் ஹோல்டாலையும் பெட்டிக்குள் கொண்டு வந்தான். கண்டக்டர் பின்தொடர இளம் பெண் ஒருத்தி உள்ளே நுழைந்தாள். அவளுடைய தோளிலிருந்து ஒரு டம்பப் பை தொங்கிற்று.

''இதிலே இரண்டு அப்பர் பெர்த் காலி. மூன்றாவது இடத்தை உங்கள் பேரில் ரிஸர்வ் செய்கிறேன். தமது நீண்ட குறிப்பேட்டில் பெயரைக் குறித்துக் கொண்டு கண்டக்டர் கீழே இறங்கினார்.

''நான் கடைசிக் கம்பார்ட்மெண்டில் இருக்கிறேன், மாலினி. வழியில் வந்து கவனித்துக் கொள்கிறேன். குடிநீர் இருக்கிறதல்லவா?'' என்று கேட்டவாறு இளைஞன் கீழே இறங்கினான். ரயில் வண்டி நகர்ந்தது. கூலியாள் கதவை இறுக மூடினான்.

மாலினி தனது கைப் பையைத் திறந்து சிறிய பூத் துவாலையை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டாள். ஒரு தம்ளர் குளிர்ந்த நீர் அருந்தினாள். முழு இருக்கையிலும் படுக்கையை விரித்திருந்த தங்கம்மாளின் முகத்தை இரங்கற்குறி தோன்ற நோக்கினாள்.

'' உட்காரம்மா !'' என்று பரிவுடன் கூறினாள் தங்கம்மாள். ''டில்லிக்கா?'' அவள் வினவினாள்.

''இல்லை, ஹைதராபாத்!'' மாலினி விடையிறுத்தாள். பிறகு தொடர்ந்து பேசினாள்: ''ஹைதராபாத் எக்ஸ்பிரஸில் இடம் கிடைக்கவில்லை. காஜிபேட்டில் வண்டி மாற வேண்டும்.''

மாலினி ரயிலில் ஏறியதிலிருந்து அவளை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்த தங்கம்மாள் அவளுடைய கண்களைச் சந்தித்தாள். ''நீ அங்கு போவது முதல் தடவையா? தனியாகவா போகிறாய்?''

''ஆமாம், அங்கே ஹெவி எலக்ட்ரிகல்ஸில் உத்தியோகம் கிடைத்திருக்கிறது. என்னை ரயில் ஏற்றிவிட்ட நண்பரும் அங்கேயே வேலைக்கு அமர்கிறார். தொழிற்சாலை ஹைதராபாத் நகரத்திலிருந்து வெகு தொலைவாமே!''

வைத்த விழி மாறாமல் மாலினியையே பார்த்துக் கொண்டிருந்த தங்கம்மாள் கனிவுடன் பதிலிறுத்தாள். ''ஆமாம், சுமார் பதினைந்து மைல் டாக்ஸியில் போக வேண்டும். அங்கேயே உங்களுக்குக் குவார்ட்டர்ஸ் கிடைக்கும். நகரத்தில் வசிக்க விரும்பினாலும் தினமும் தொழிற்சாலை வான் வந்து அழைத்துப் போகும். ஆனால் க்வார்ட்டர்ஸ் தான் சௌகரியம்.''

''ஹைதராபாத்தில் நீங்கள் தங்கியது உண்டா?''

''போயிருக்கிறேன். அங்கே எனக்கு அறிமுகமானவர்கள் பலர் இருக்கிறார்கள்.''

வழக்கத்துக்கு மாறாக ரயில் சூலூர்ப் பேட்டையில் நின்றபோது வெள்ளையுடை அணிந்த பணியாள் சாளரத்தின் கண்ணாடியைத் தட்டினார். ''கூடூரில் சாப்பாடு வேண்டுமா?''

தங்கம்மாள் பணியாளைப் பார்த்துப் பதிலிறுத்தார்: ''நான் முன்னாலேயே ஆர்டர் கொடுத்து விட்டேன், சைவ உணவு...''

பணியாள் மாலினியின் முகத்தை நோக்கினான்.

''எனக்கும் சைவ உணவே போதும்'' என்று மாலினி பதிலிறுத்தாள்.

''உன்னைப் பார்த்தால் சுத்த சைவம் என்று எண்ணினேன்'' என்று தங்கம்மாள் கூறினாள்.

மாலினி சற்றுத் தயங்கியவாறு பேசினாள். ''என் தாயார் சுத்த சைவம். என் தகப்பனாருக்குத் தினமும் முட்டைப் பொரியல் வேண்டும். குருமா, கோப்தா என்றால் உயிரை விட்டுவிடுவார். எனக்கு இரண்டுமே பிடித்தும். பார்க்கப் போனால் இதில் என்ன இருக்கிறது?''

''தெலுங்கானாவில் எல்லாம் ஒரே கலவரமாக இருக்கிறது. நீ ஜாக்கிரதையாகப் பழக வேண்டும்.'' பேச்சை மாற்றினாள் தங்கம்மாள்.

''அவர்கள் தமிழர்களை ஒன்றும் செய்வதில்லையாமே?'' என்று மாலினி வினவினாள். இருந்தாலும் அவளுடைய விழிகளில் அச்சத்தின் ரேகை ஒளிர்ந்தது.

ரயிலின் அசைவில் மாலினியின் உடல் தொட்டிலின் சுகத்தை அனுபவித்தது. அவளுடைய கண்ணிமைகள் கனத்தன. 'கொஞ்ச நேரம் படுத்துக் கொள்ளேன்.'' இருக்கையின் மூலைக்கு நகர்ந்து கொண்டு வெள்ளை உறையிட்ட தலையணையை எடுத்து அவளிடம் கொடுத்தாள் தங்கம்மாள்.

''நேற்று இரவு சரியான உறக்கமில்லை. ஹாஸ்டலில் பலபேரிடம் விடைபெற்றுக் கொள்ள வேண்டியிருந்தது.'' தலைப் பின்னலை ஒதுக்கி விட்டுக் கொண்டு உடலைக் குறுக்கிய

வாறு படுத்தாள் மாலினி. அடுத்த நிமிஷமே உறங்கியும் போனாள்.

அந்த உறங்கும் யுவதியின் முகத்தையும், அங்க அமைப்பையும் கூர்ந்து ஆராய்ந்தாள் தங்கம்மாள். அவளைச் சூழ்ந்திருந்த உடல் மணம் கூட அவளுக்கு அறிமுகமானது போல் தோன்றியது. தன்னை யறியாமல் அவளுடைய கை மாலினியின் கூந்தலை வருடிற்று. நெஞ்சில் தாயுணர்வு பொங்கிக் கனத்தது.

**கா**ல் நூற்றாண்டு கழிந்திருக்கும். அப்போது தங்கமும் ஸத்யவதியும் சம வயதினர். தொடக்கப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, கல்லூரி என்று ஒரே மாவட்டத்தில் படித்தவர்கள். பாலப் பிராயத்துச் சேட்டைகள், கன்னி வயதுக் கனவுகள் என்று எவ்வளவோ நிகழ்ச்சிகள். ஸத்யவதி தங்கத்திடம் உயிரையே வைத்திருந்தாள். தனிமையில் அவளைக் கட்டித் தழுவி உச்சி மோந்து ராஜனை உணர்வுகளை விழித்துக்கொள்ளச் செய்து விடுவாள். கணக்கில்லாத கடிதங்கள் எழுதுவாள். அடுத்த அறையில் குடியிருக்கும் தங்கத்துக்கு வாரம் மூன்று கடிதங்கள் வரும். அவைகளுக்குப் பதில் எழுதியே மாளாது தங்கத்துக்கு. ''நீ ஒரு லைகோ கேஸடி'' என்று தோழியைக் கேலி செய்வாள் தங்கம். ''உன்னைக் கட்டிக் கொள்கிறவன் பாடு திண்டாட்டம்'' என்று கூறுவாள்.

''எனக்குக் கல்யாணமே வேண்டாம். நான் உன்னுடனேயே இருந்து விடப் போகிறேன். இல்லாவிட்டால் இரண்டுபேருமே...''



தங்கம் தோழியின் வாயைப் பொத்துகிறாள். "ஏதாவது உளறாதே....!"

மாலினியின் கருண்ட கேசம், அடர்ந்த கூடும் புருவம், மெல்லிய உதடுகள், பெரிய விழிகள், செதுக்கிய முகவாய், அனைத்தும் சேர்ந்து அவளுக்குத் தன் தோழியை நினைவுறுத்தின.

ரயில் கூடூர் ஸ்டேஷனை நெருங்கும்போது வெய்யில் தகித்துக் கொண்டிருந்தது. குளியலறையில் முகம் கழுவச் சென்று திரும்பிய மாலினி, "ஏ, அப்பா! தண்ணீர் எப்படிக் கொதிக்கிறது, தெரியுமா?" என்று பெருமூச்சுடன் கூறினாள்.

இரண்டு எவர்சில்வர் கேரியரில் உணவை வைத்து விட்டு இரண்டு நுனி இலைகளையும் அதன் மேல் பொருத்தினான் பணியாள். ஒரு கூஜாவில் குளிர்ந்த நீர்.

இலையைப் பிரித்துத் தண்ணீர் தெளித்து அடுக்குப் பாத்திரத்திலிருந்து உணவை எடுத்துப் பரிமாறினாள் தங்கம்மாள். அவளுடைய செய்கையிலிருந்த பரிவு மாலினியின் நெஞ்சைத் தொட்டது. பிருப்பில் இட்டிருந்த மாங்காய்த் துண்டைச் சுவைத்தவாறு, "சாப்பாடு நன்றாகத்தான் இருக்கிறது" என்றாள்.

"இந்த ஸ்டேஷனுடன் நல்ல சாப்பாடு முடிந்து விட்டது. இனிமேல் எங்காவது சாப்பிட்டால் ரசத்தில் பொடி வாசனை வீசாது. கடுகு வெடித்திருக்காது. நமது உணவின் சுவையே அதன் பக்குவ முறையில்தான் இருக்கிறது."

"இன்று என்னவோ என் தாயாரின் கையால் சாப்பிடுவதுபோல் தோன்றுகிறது. எங்கம்மாவுக்குப் பிறருக்குச் சாப்பாடு தயாரிப்பதிலும் வட்டிப்பதிலும் கொள்ளை ஆசை. மிகுந்த சிரமத்துடன் வேலைக்காரன் தயாரிக்கும் புலால் உணவை அவள் என் தந்தைக்குப் படைப்பாள். அவளுடைய முகத்தில் இருக்கும் பாவனையைக் கண்டு என் தகப்பனார் தாலத்தை விட்டெறிவார். நான் அப்போது சிறு குழந்தை. ஒன்றும் புரியாமல் விழிப்பேன். பின்னாளில் இந்த வேறுபட்ட குண விசேஷங்களினால் அவர்களால் இணைந்து வாழ முடியாமலே போய் விட்டது."

தங்கம்மாளுக்கு ஏதோ புரிந்தது போலிருந்தது. என்றாலும் மாலினியைத் தூண்டிக் கேட்க விருப்பமில்லாமல் உணவருந்தத் தொடங்கினாள்.

"உன் பெற்றோர்கள் கலப்பு மணம் செய்து கொண்டவர்களா?" என்று தங்கம்மாள் வினவினாள்.

"ஆமாம்!" மாலினி தலையை அசைத்தாள். "என் தாயாருக்கு நெருங்கிய தோழி ஒருத்தி இருந்தாளாம். அவர்களிடையே மிக ஆழ்ந்த நட்பாம். அந்தத் தோழிக்கும் என் தந்தையிடம் மிகுந்த ஈடுபாடு இருந்ததாம். ஆனால் என் பெற்றோர்களிடையே நிலவிய தீவிரமான கவர்ச்சியைக் கண்டு அவள் அந்தப் பாதையிலிருந்தே விலகிக் கொண்டாளாம்."

"இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது?"

"ஒவ்வொரு நாள் பின்னிரவில் என் தந்தையும் தாயும் சண்டையிட்டுக் கொள்வார்கள். அம்மா குமுறிக் குமுறி அழுவாள். தந்தை அவளைத் தண்ணீர்ச் செம்பாலேயே மொத்துவார்."

ரயில் ஒரு குலுக்கலுடன் தொடர்ந்து நகரத் தொடங்கிற்று. தங்கம்மாள் ஜன்னல் ஓரத்தில் தலையைச் சாய்த்துக் கொண்டு கண்ணிமைகளை இலேசாக மூடினாள். மனத்திரைக்குள் காட்சிகள் விரைவாக நகரத் தொடங்கின.

தங்கம்மாளின் பெற்றோர்கள் வசதியான நிலையில் வாழ்ந்தவர்கள். தங்கம் அவர்களுடைய செல்வ மகள். கூடப் பிறந்த தங்கையோ தம்பியோ இல்லாததினால் தன் அன்பு முழுவதையும் தன் தோழி ஸத்யவதியின் மேலேயே பொழிந்தாள் அவள். தன் வீட்டில் செய்யப்படும் இனிப்புப் பண்டங்கள் அனைத்திலும் அவளுக்குப் பங்கு வைத்திருப்பாள். பாவாடை, தாவணி வாங்கும் போது அதே நிறத்தில் இன்னொன்று தேர்ந்தெடுப்பாள். சமுதாய நிலையின், இனத்தின் வெவ்வேறு படியில் அவர்கள் இருந்தபோதிலும் அவர்களிடையே அதீதமான ஈர்ப்பு இருந்தது.

தங்கம்மாளுக்கு வில்லியம்ஸுடன் திருமணம் நிச்சயமானபோதுதான் விசித்திரமான அந்தப் பிரச்னை குறுக்கிட்டது. தங்கம் தன் நிலையைத் தோழிக்குச் சிரமப்பட்டு விளக்கினாள். "ஒரு பாதாம் பருப்புப் பப்பரமிட்டு வாங்கினாலும் காக்காய்க் கடி கடித்துப் பாதி உனக்குக் கொடுப்பேன். கணவனையும் அதே மாதிரி செய்ய முடியுமா முட்டாள்?" அவள் ஸத்யவதியைக் கடிந்து கொண்டாள்.

"இதோ பார், ஒரு பெண் எதை வேண்டுமானாலும் சகித்துக் கொள்ளுவாள். ஆனால் கணவனின் அன்பை மட்டும் அவளால் கூறு போட இயலாது. கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் என்றே பிறந்தவர்கள். இன்னாருக்குள்தான் திருமணம் நிகழலாம் என்று சமுதாயம் அழகாகப் பாத்தி கட்டி வைத்திருக்கிறது. மனைவிக்கு வாழ்க்கைத் துணை நலம் என்றும் சகதர்மிணி என்றும் நமது பெருநூல்கள் பெயரிட்டிருக்கின்றன. ஒவ்வொருவருடைய இயல்புக்கும் ஏற்றவாறு தர்மம் அமைகிறது. அந்த வாழ்முறை, சுற்றுப்புறம், ஆசாரம், உணவுப் பழக்கம் ஆகியவைகளினால் பண்படுத்தப்படுகிறது" என்று எவ்வளவோ அறிவுரை கூறினாள்.

கால தேவதையின் தூரிகை வேறுவிதமாகச் செயல்பட்டது. வில்லியம்ஸுக்கு அருகே ஸத்யவதியின் ஓவியத்தைச் செவ்வனே வரைந்த பிறகு அவர்களைப் பிரித்தும் வைத்தது.

திடீரென்று இருவாட்சியின் மணம் நெடியாக வீசவே தங்கம் கண்களைத் திறந்தாள். பூச்செண்டுகளையும் சரங்களையும் கூடையில் சுமந்து கொண்டு நின்றிருந்தான் ஓர் இளைஞன். கதம்பத்தை நிறைய வாங்கிக்கொண்டு மாலினியை அருகில் அழைத்தாள் தங்கம். அவளுடைய தலைப் பின்னலை அவிழ்த்துக் கோதி வாரிவிடத் தொடங்கினாள்.

"எங்கம்மாவுக்கு மலர்கள் என்றால் ரொம்பப் பிரியம்." தங்கத்தின் முகத்தைப் பார்த்தாள் மாலினி.

ஒரு குழந்தையிடம் காட்டும் பரிவுடன் அவளுடைய தலை வகிடைப் பிளந்து கொண்டிருந்த தங்கத்தின் உடல் புல்லரித்

தது: ஸத்யவதியின் பார்வை இதே அச்சாகத்தான் இருக்கும்.

"இன்று என்னவோ என் அம்மாவின் நினைவு மிகுதியாக வருகிறது" என்று தனக்குத் தானே கூறிக் கொண்டாள் மாலினி.

"தலை வாரிக் கொள்ளும்போது அப்படித்தான் தாயாரின் நினைவு வரும்." தங்கம் பதிலிறுத்தாள்.

" என் கடிதம் போய்ச் சேர்ந்திருந்தால் அம்மாவே ஸ்டேஷனுக்கு வந்திருப்பாள். இல்லாவிட்டால் நான்தான் அவளைப் பார்த்து விட்டுப் புறப்பட வேண்டும். வேலையில் சேருவதற்கு ஒரு நாள் தாமதமாகிவிடும். விளக்கம் கூறும்படியும் நேரலாம்."

ரயில் கிருஷ்ணா நதிப் பாலத்தைக் கடகடவென்ற ஒலியுடன் கடந்தது. ஆற்றின் நடுவிலுள்ள பசுமையான தீவுகள் அழகாகக் காட்சியளித்தன.

பல தண்டவாள இணைப்புக்களைக் கடந்து ரயில் நீண்ட தாழ்வாரத்தின் இறுதிக் கோடியில் சென்று நின்றது. பிளாட்பாரம் முழுதும் சொல்ல முடியாத பரபரப்பு. இடையே கிராக்கி ஒன்றும் கிடைக்காத கூலி ஒருவன் தலைச் கும்மாட்டை அவிழ்த்துத் தோளில் போட்டுக் கொண்டு கொட்டாவி விட்டவாறு விரலைச் சொடுக்கினான். அவன் கால்களுக்கிடையே ஒரு நாய் புகுந்து வெளிப்பட்டது. மாலினி பெட்டியை விட்டுக் கீழே இறங்கி ஆவலுடன் நோக்கினாள். அவளுடைய உடல் ஒரு நிலையில் இல்லை.

கால் மணி நேரம் கழிந்திருக்கும்: கூட்டத்தை விலக்கிக் கொண்டு முதியவன் ஒருவன் அவளிடம் வந்து நின்றான். "வா, வா, சங்கரா! எவ்வளவு நேரமாக உன்னைத் தேடுகிறேன். அம்மா வரவில்லையா?" மாலினி பரபரப்புடன் வினவினாள்.

சங்கரன் தலையைக் குனிந்து கொண்டான். "நாங்கள் கொடுத்த தந்தி உனக்குக் கிடைக்கவில்லை போலிருக்கிறது."

"தந்தியா? என்ன விஷயம்? அம்மாவுக்கு ஒன்றும் இல்லையே?" மாலினி பதறினாள்.

"அம்மா..." சங்கரனின் குரல் தமறியது. அவன் வானத்தை நோக்கினான். "உன் அம்மா முந்தாநாளே போய் விட்டார்கள். அப்பாகூட வரவில்லை."

"அம்மா, என் அம்மா!" மாலினி தலையை ஜன்னலில் மோதிக் கொண்டாள். பிரயாணிகளின் கூட்டம் குழுமி விட்டது. தங்கம்மாள் கீழே இறங்கி மாலினிக்குக் கைலாகு கொடுத்து உள்ளே அழைத்து வந்து ஆறுதல் கூற முயன்றாள்.

கணகணவென்று மணி அடித்தது. பிளாட்பாரத்தில் 'விர்' என்ற ஊதல் ஒலி.

காக்கி உடையணிந்த டிக்கட் பரிசோதகர் பெட்டியினுள் நுழைந்தார்.

"இந்தப் பெண்ணுடைய டிக்கெட்டையும் புது தில்லிக்கு மாற்றி விடுங்கள்." தன்னுடைய கைப்பையைப் பிரித்தாள் தங்கம்மாள்.

ஒருவித கிறீச்சிட்ட ஒலியுடன் நகர்ந்தது ரயில் வண்டி.

## அந்நிய மண்ணில் இந்திய கோஷங்கள்! (விடை)

அன்னிய மண்ணில் இருந்தாலும் தாய்நாட்டை மறக்காமல் இந்தியாவில் உணவுப் பெருக்கத்துக்குப் பலர் ஆர்வத்தோடு உறுதுணை செய்கிறார்கள். இவர்கள் வாய்ச் சொல் வீரர்கள் இல்லை, செயல் வீரர்கள் என்பது சமீபத்தில் தெரிந்தது.

இந்திய சர்க்கார் 1968ம் ஆண்டு அக்டோபர் 24ந் தேதி குறைந்த அளவு டிராக்டர்களை அன்னியச் சீமையிலிருந்து விவசாயிகள் தங்கள் நெருங்கிய உறவினர்களிடமிருந்து வெகுமதியாக இறக்குமதி செய்து கொள்ளலாம் என்று ஓர் அறிக்கையை வெளியிட்டது.

லண்டனில் உள்ள இந்தியப் புத்தகக் கடைக்காரர் மிகுந்த மகிழ்ச்சியோடு குஜராத்தில் கெய்ராவில் உள்ள தமது தந்தைக்கு டிராக்டர் அனுப்பி வைத்தார். கவென்ட்ரி பள்ளி ஆசிரியர் பஞ்சாபிலுள்ள தம் தந்தைக்குப் பேருதவியாக இருக்கட்டும் என்று ஒரு டிராக்டர் அளிக்க முன்வந்தார். ஹொங்கொங்கில் உள்ள இந்தியத் தொழிலாளி ஜோத்பூரிலுள்ள தம் சகோதரரை மறக்கவில்லை. அமெரிக்காவிலுள்ள சர்வகலாசாலை ஆசிரியர் ஆந்திரத்திலுள்ள தம் சகோதரருக்கு நினைவாக டிராக்டர் அனுப்பி வைத்தார்.

இப்படி அயல் மண்ணில் குடியேறிய பல இந்திய மக்கள் உணவுப் பெருக்கத்துக்கு டிராக்டர்கள் உதவினார்கள். அங்கிருந்து அனுப்பப்பட்ட டிராக்டர் பாகங்களை இணைத்துத் தரும் பணியைச் சென்னை டஃபே ஸ்தாபனத்தினர் மேற்கொண்டிருக்கிறார்கள். வெகுமதியாகப் பெற்றவர்களுக்கு டிராக்டர் இயக்கும் விதத்தைக் கற்பிக்கவும் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்கவும் டஃபே ஸ்தாபனத்தினர் முன்வந்திருக்கின்றனர். சென்னை புதுப்பாக்கத்தில் டஃபே டிராக்டர் பயிற்சிப் பள்ளியில் பயிற்சி வகுப்புக்கள் நடத்தி வருகிறார்கள்.







## திரு. வி. க.

**1919** மார்ச் 18ந் தேதி திரு வி. க. (கலியாணசுந்தர முதலியார்) அரக்கோணம் சந்திப்பில் பம்பாய் மெயில் வருகையை எதிர் பார்த்துக் காத்திருந்தார். கையில் சேலம் விஜயராகவாச்சாரியார் கொடுத்த அறிமுகக் கடிதம் இருந்தது. ரயில் வந்ததும் காந்திஜி இருந்த வண்டியில் ஏறித் திரு. வி. க. அவர்கள் அண்ணலுக்கு வணக்கம் கூறிக் கடிதத்தைக் கொடுத்தார்.

அதைப் படித்துவிட்டு '' 'தேச பக்தன்' எம்மொழிப் பத்திரிகை?'' என்று காந்திஜி கேட்டார்.

''தமிழ்ப் பத்திரிகை.''

''நீங்கள் பட்டதாரியா?''

''யான் பட்டதாரியல்லன். மெட்ரிகுலேஷன் வரை ஆங்கிலம் பயின்றவன். தமிழாசிரியன். தொழிலாளர் கூட்டங்களில் பெஸண்ட், வாடியா இவர்களின் பிரசங்கங்களை மொழிபெயர்ப்பதுண்டு.''

''என் பேச்சை மொழி பெயர்ப்பீரோ?''

''அது என் பாக்கியம்'' என்றார். திரு.வி.க.

சென்னை மேடைகளில் திரு வி. க.வைக் காண நேர்ந்தபோதெல்லாம் ''நீங்கள் மொழி பெயர்ப்பாளர் அல்லவா?'' என்று காந்திஜி சிரித்துக் கொண்டே கேட்பது வழக்கம். பெரம்பூரில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில்தான் வ. உ. சிதம்பரம் பிள்ளையைக் காந்திஜிக்கு திரு. வி. க. அறிமுகப் படுத்தி வைத்தார்.

சில ஆண்டுகள் கழித்து மறுபடியும் திரு. வி. க. காந்திஜியைச் சந்திக்க நேர்ந்த போது, ''மிஸ்டர் டிரான்ஸ்லேட்டர்'' என்றே அழைத்து காந்திஜி சிரித்தார்.

## ஆர். கே. ஷண்முகம் செட்டியார்

தமிழகத்துக்கு ஒரு சமயம் வருகை தந்த போது கோயமுத்தூரில் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் வீட்டில் காந்திஜி தங்கினார். வந்ததும் வராததுமாக காந்திஜி ஷண்முகம் செட்டியாரைப் பார்த்துக் கேட்ட முதல் கேள்வி ''இந்த ஊர் போலீஸ் அதிகாரியைத் தெரியுமா?'' என்பதுதான். ''என்ன விஷயம்? கொஞ்சம் தெரியும். முதலில் சிரம பரிகாரம் செய்து கொள்ளுங்கள்'' என்றார் ஷண்முகம்.

''அதெல்லாம் இருக்கட்டும். நீங்கள் முதலில் அந்தப் போலீஸ் அதிகாரியிடம் உடனே தூது போக வேண்டும். நான் வரும் வழியில் ஓர் எளிய மனிதன் காவடி மாதிரி இரு எண்ணெய் டின்களைத் தோளில் தூக்கிச் சென்று கொண்டிருந்தான். சில போலீஸ்காரர்கள் ஓடி வந்துகொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் இவன் மீது மோதியதால் எண்ணெயெல்லாம் கொட்டி விட்டது. போலீஸ்காரர்களில் எவரும் இதைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை. அந்த எண்ணெய்க்காரன் செய்வதறியாது திகைத்து விட்டான். அவனையும் அழைத்து வரச் செய்திருக்கிறேன்.''

''கேஸ் ஏதாவது கொடுக்க வேண்டுமா?''

''கேஸ் எதுவும் வேண்டியதில்லை. போலீஸ் அதிகாரியிடம் சாந்த தூதனாகச் சென்று இதற்கு நிவர்த்தி தேட வேண்டும். மோதிய போலீஸ்காரர் இவனிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். கொட்டிப் போன எண்ணெய்க்கான விலையை இவனுக்குக் கொடுக்க வேண்டும். இதுதான் நீங்கள் எனக்காகச் செய்ய வேண்டிய வேலை'' என்றார் காந்திஜி.

அவ்வூர்ப் போலீஸ் அதிகாரி ஒரு முரட்டு வெள்ளைக்காரர். சண்முகம் செட்டியாருக்கு இது நடக்கும் காரியமாகத் தோன்றவில்லை. அந்த அதிகாரியிடம் சென்று நடந்த விஷயத்தைச் சொல்லி காந்திஜி தெரிவித்த விவரத்தையும் சொன்னார். அதிகாரி இதற்குச் சம்மதப்படவில்லை.

''காந்திஜி இவ்விஷயத்தை இத்துடன் விட்டுவிடுபவர் அல்ல. எதற்கும் நீங்களே அவரை வந்து பார்த்து விடுவது நல்லது'' என்றார் ஷண்முகம்.

அந்தப் போலீஸ் அதிகாரி மனமில்லாமல் காந்திஜியைக் காணச் சென்றார். மகாத்மாவுடன் பத்து நிமிடங்கள் பேசியதும் எண்ணெய்க்காரனிடம் அந்த அதிகாரி மன்னிப்புக் கேட்டதுடன் கொட்டிப்போன எண்ணெய்க்கான விலையையும் அவரே கொடுத்துவிட்டார்.

திருப்தி அடைந்த காந்திஜி, ''உங்கள் வீட்டுக்கு வந்ததும் வராததுமாக உங்களுக்கு வேலை வைத்து விட்டேன்'' என்றார் சிரித்துக் கொண்டே.

—''சஜன்''



# கந்தனைக் காணாத கண்கள்

**துரோணன்**

ஜனசமுத்திரமாகவுள்ள இவ்வளவு பெரிய நகரத்திலும் கந்தனைக் காணாத கண்கள் அநேகமாக இருக்க முடியாது. அப்படிப் பார்த்த கண்கள் அவனிடம் ஒரு சிறு நாணயத்தையாவது வழங்காமல் இருந்திருக்கவும் முடியாது. ஒன்று — பார்த்து விட்டுப் பேசாமலிருந்து விடலாம்; அல்லது ஏதாவதொரு நாணயத்தை வழங்குவதன் மூலம் அவனுடைய இதயத்தில் மிக உயர்வான மதிப்பைப் பெற்றுவிடலாம். இவற்றுக்கு மாறாக அவனை ஏமாற்றி விடலாம் என்கிற கருத்தை மட்டிலும் எவரும் கொண்டுவிட முடியாது. தன்னைப் பார்க்கும் கண்களில் பரிவு இருக்கிறதா, பயம் இருக்கிறதா, அல்லது பகட்டு வஞ்சம் மறைந்திருக்கிறதா என்பதை அவனும் சுலபமாக அறிந்து கொள்ள முடியும்!

"நான் எப்படி உங்களிடம் பேச முடியாத பிறவியோ அப்படியேதான் என் எஜமானரும் வாயற்ற ஏழை. என்னைக் காணும் உங்கள் இதய இரக்கத்துக்கு ஈகையின் மூலம் மதிப்பளியுங்கள். உங்களது ஈகையே எங்கள் ஆறு பிறவிகளுக்கு வாழ்வை அளிக்கும் தர்மம். ஒரு தடவை ஈகைக்குப் பன்மடங்கான அருளைப் பெறுவீர்கள்.

உங்களை என்றும் மறவாத

அடிமைக் கந்தன்"

இவ்வாறு அச்செழுத்தால் எழுதப்பட்டுள்ள விளம்பரத் தகரம், ஒரு காலியான பால் பவுடர் டப்பாவின் நடு மையத்தில் வைத்து ஆணி போட்டுப் பொருத்தப்பட்டிருந்தது. இந்தத் தகர டப்பா உண்டியைச் சுலபமாகத் தூக்கிச் செல்லும் வகையில் மேலே பொருத்தப்பட்டிருந்த ஒரு கம்பிப் பிடி — இதை வாயினால் கவ்விக் கொண்டு கந்தன் புறப்பட்டு விடுவான்.

அன்றாடம் மாலை மூன்று மணி சுமாருக்கு வீட்டை விட்டுக் கிளம்புவான். ஒரு நாள் கோட்டை கடற்கரைக்கு வருவான்; அடுத்த நாள் திருவல்லிக்கேணி கடற்கரை; அதற்கடுத்த நாள் சாந்தோம்; அப்புறம் அடையாறு — இப்படி மாறி மாறி அவனது இடங்கள் — அவனாகவே போட்டுக் கொள்ளும் பலவைதான். சிற்சில நாட்கள் ஹைகோர்ட் எல்லைக்குள்ளும், சட்டக் கல்லூரிக்குள்ளும் வந்து போவதுமுண்டு. இப்படி வருவதிலும் எந்தெந்த நாட்கள் விடுமுறை என்பதுவும் கூட அவனுக்குத் தெரிந்த விஷயம்!

அவனுடைய பெயர் தெரியாதவர்கள் இல்லை! ஒரு நாள் பழகினால் போதாதா அவனுக்கு? பத்துப் பைசாவோ, ஐந்து பைசாவோ — அதற்குக் குறைச்சலில்லை! ஏதாவதொரு நாணயம் 'பொட்'டென்று அவனுடைய உண்டியில் விழுந்த கணமே அவனது கண்களில் நன்றிப் பெருக்கின் ஒளி தவழும். அந்த ஒரே விநாடிப் பார்வைக்குள் அந்தப் புண்ணியவானின் உருவத்தை அவனது இதயம் படம் பிடித்துக் கொண்டு விடும். அப்புறம் அவர்களே அவனுக்கு வாடிக்கைக்காரர்களாகி விடுவார்கள். சில நாள் பழக்கப்பட்டவர்களிடமே அவன் வந்து நிற்கும்போது, 'இல்லை' என்ற நயமான வார்த்தையைப் புரிந்து கொண்டு அமைதியாகத் திரும்பி விடுவான். இப்படி மாலை ஆறு மணிக்குள்ளாக, சுமார் நான்கு ரூபாய் சில்லறைகள் அவனது உண்டியலில் சேர்ந்து விடும். பொழுது சாய்ந்து நகரசபை விளக்குகள் எரிய ஆரம்பித்தவுடனேயே அவனது கால்களுக்கு வேகம் பிறந்துவிடும். அவ்வளவிலும் நுழைந்து புறப்பட்டு, நொடிப் பொழுதுக்குள்ளாக வீடு வந்து சேர்ந்து விடுவான். அப்போதுள்ள வேகத்தில் யார் எப்படிக் கூப்பிட்டாலும் அவனது காதுகளுக்கு ஏறாது.

சென்னை நகரத்தைக் குபேரப் பட்டணமாகக் கருதியிருப்பவர்களையெல்லாம் ஒரு தடவை எழும்பூர் ரயில் பாதைக்கும் கூவம் ஆற்றுக்கும் இடையேயுள்ள நெடுங்குப்பத்தைக் காண வைத்து விட்டால் போதும்.

பனைமட்டை, ஈச்சம் பாய், துருப்பிடித்த தகர வகைகள், கிழிந்த ஓலைப் பாய்கள் இவற்றை மேற் கூரைகளாகக் கொண்ட குடிசைகளையும், அங்கேயுள்ள நெரிசலையும் ஒரு நாளாவது காணட்டுமே? அங்கே நல்லவர்கள் யார், தீயவர்கள் யார் என்பதைக் கண்டுபிடிப்பது மிகக் கடினம். எல்லாம் கலந்து கட்டி. அந்த குப்பத்தின் மேலண்டைக் கோடியில், கொஞ்சம் உயர்வான மேட்டில் ஈசான்யத் திசையைப் பார்த்தபடி அமைந்திருந்த தனிக் குடிசைதான் ராஜா பாதருடையது. அந்த வட்டாரத்தில் அவனுடைய பெயரைச் சரிவர அறிந்தவர்கள் அதிகமில்லை. பழக்கம் அதிகம் கொண்டவர்களுமில்லை.

சந்தனின் வேண்டுகோள் அறிவிப்பிலுள்ள செய்திகள் உண்மை. அவனுக்கு எஜமானராக உள்ள ராஜாபாதர் பிறவி ஊமை. அத்துடன் பிறவியிலேயே சூம்பிச் சிறுத்துப் படைக்கப்பட்டிருந்த வலது கால் ஊனத்துடன் நாற்பது வயதுகளைப் போக்கிவிட்டவன். அவனைச் சேர்ந்த குடும்பம் — ஆறேழு வயதுகளில் இரண்டு பெட்டைகள்; ஐந்து வயதில் ஒரு பிள்ளை; இவர்களுக்கெல்லாம் ஆக்கிப் போட்டுக் கொண்டிருக்கும் பூங்கொடி ஒருத்தி—ஆக, அவனையும் சேர்த்து ஐந்து பேர்கள்.

காலை எட்டு மணி சுமாருக்கு ராஜா பாதரை எழும்பூர் ரயிலடிக்கு எதிர்ப்பக்கமுள்ள தூங்குமூஞ்சி மரத்தடியின் நடைபாதைக்குக் கொண்டு வந்து அமர்த்துவதும், மறுபடியும் பகல் இரண்டு மணிக்கு அழைத்துப் போக வேண்டியதுமான பொறுப்பு பூங்கொடியைச் சேர்ந்தது. ஒரு கைக்கு ஊன்றுகோலும், மறு கைக்குப் பூங்கொடியின் தோளுமாக ஆதரவு கொண்டு தொழிலுக்கு வந்து சேருவான் ராஜாபாதர். அங்கே வந்து அமர்ந்ததும் அவனுடைய கடை — சாக்கு மூட்டைக்குள்ளிருக்கும் ஆயுத வகைகள், பழைய செருப்புத் தோல்கள், டயர், அட்டை, லாடம், ஆணி வகை, பாலிஷ் டப்பாக்கள் இவ்வளவும் கொண்டவை திறந்து வைக்கப்படும்.

'ஊமையன் கைவேலை'யைப் பற்றி நல்ல மதிப்பு அந்த வட்டாரத்துக்கு. அப்படியிருந்தும், ராஜாபாதருக்கு அன்றாட வரும்படி இரண்டு ரூபாயைத் தாண்டியதில்லை. நாலுதரம் உஸ்மான் கடை சாயா குடித்தது போக மிச்சப்படும் தொகையைக் கொண்டு இந்தக் காலத்தில் என்ன வாங்க முடியும்? சந்தன் கொண்டு வரும் வருமானம்தான் உயர்ந்த வருமானம். அவன் ஒருவன் இல்லாவிட்டால், இந்தக் கண்ணியமான உடை, குடிசை, உள்ளே உடல் நலுங்காமல் படுத்திருக்க ஒரு கயிற்றுக் கட்டில், உறியிலேற்ற அடுக்கடுக்காக உள்ள அலுமினியப் பானைகள் இவ்வளவும் கொண்ட நல்வாழ்வு ராஜாபாதருக்கு ஏது?

குப்பத்தின் மேலண்டைக் கோடிக் குடிசையில் வாழும் குருவி ஜோசியக்காரன் குருவாடிக்குக் கைகால்கள் இரண்டேயானாலும் உடம்பெல்லாம் கண்கள்! அவனுடைய கைரேகை பார்க்கும் மவுசுக்கும், வாய் ஜாலங்களில் மயங்குவதற்குமாக, சென்னையில் சில வட்டாரங்கள் உண்டு. ஆனால் இந்த முறையில்தான் அவனுக்குப் பிழைப்பு என்கிற நிர்ணயமும் இல்லை. சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்றபடி அவனது ஊதியங்களுக்கு இரகசியங்களும் உண்டு! இப்படி உள்ள குருவாடியின் பல கண்களில் சில கண்கள் பூங்கொடியின் மீது விழுந்துவிட்டதற்குக் காரணமா வேண்டும்?

ஒரு நாள் நடுப்பகலில், சந்தர்ப்பமறிந்து கொண்டு வந்து சேர்ந்தான் குருவாடி. அன்றைக்கு எப்படியாவது பூங்கொடியிடம் நயந்துகட்டி, அவளைத் தன் குறிக்கோளுக்குத் தயாரித்துவிடும் திட்டம் உருவாகியிருந்தது. குடிசைக்குள் முதல் அடியை வைத்துவிட்டு ஒரு கனைப்பையும் விடுத்தான். அடுப்படியிலிருந்த பூங்கொடி திகைத்து மிரண்ட வண்ணம் திரும்பினாள். இவ்வளவுதான் நிகழ்ந்தவை. அதே கணத்தில் 'உர்ர்ர்ர்...' என்ற பயங்கர உறுமல் ஒலி ஒன்று திடீரென வெளிப்படவும் அயர்ந்து நின்றான் குருவாடி. அவனது கண்களுக்கு இரண்டு நெருப்புப் பந்தங்கள் தெரிந்தன.

கட்டிலின் கீழே சுவர் மூலையில் கன நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்த சந்த



னுக்கு என்ன தோன்றிற்றோ, என்ன புரிந்ததோ! தலையை வெடுக்கெனத் தூக்கினான். உடலைச் சிலிர்த்துக் காதுகளை விறைத்தபடி ஒரு வெறிப் பார்வையை வீசினான். அவ்வளவுதான்; ஒரு கண்ணிமைப்பு நேரத்துக்குள்ளாகக் கோடையிடியைக் கேட்ட குறுமுயலைப் போல் பீதியுடன் ஓட்டம் பிடித்தான் குருவாடி.

இந்த முறையில்தான் குருவாடிக்கும், கந்தனுக்கும் பரஸ்பரமான முதல் அறிமுகம் ஏற்பட்டிருந்தது. அன்று முதல் குருவாடியின் உருவத்தைக் கந்தன் மறக்கவில்லை.

நான்கு நாட்களாகப் பிடித்துக்கொண்ட அடர் மழையினால், சென்னைப் பட்டணம் பேச்சு மூச்சற்றுக் கிடந்தது. அந்த முடக்கம் குப்பம் முழுவதிலும் முழுப் பட்டினிகளையும், ராஜாபாதரின் குடிசைக்கு அரைப் பட்டினி நிலையையும் வைத்து விட்டு விடை பெற்றது. ஐந்தாம் நாள் காலை வானத்துக்கு இரக்கம் பிறந்த வுடனேயே கந்தனுக்குக் குடிசையில் இருப்புக் கொள்ளவில்லை. உண்டியலைக் கவ்விக் கொண்டு கிளம்பினான்.

சுமார் இரண்டு மணி நேரத்துக்குள் கந்தனுக்கு ஹைகோர்ட்டுக்குள்ளும் சட்டக் கல்லூரிக்குள்ளும் இரண்டு ரூபாய் நாணயங்கள் தேறிவிட்டன. அத்துடன் நேரே கடற்கரைப் பக்கம் சவாரி விட்டான்.

திடீரென்று ஓர் ஓலக் குரல்! — கடற்கரை ஓரத்தில் — ''ஐயோ! திருடன்....திருடன்.... மணிபர்ஸ்...! பிடியுங்கள்... பிடி பிடி!...'' என்ற உரத்த குரல் எழுந்தது. கடற்கரை மணலில் ஒரு முதிய மனிதர் ஓலமிட்டபடி ஓடுவதையும், அவருக்கு முன்னால் ஒரு களவாணித் திருடன் ஓடிக் கொண்டிருப்பதையும் சிமிட்டிப் பெஞ்சுகளில் உள்ளவர்கள் கண்டார்கள்.

'சடசட'வென்ற ஓசையுடன் செடிப் புதர்களையெல்லாம் நீக்கிக் கொண்டு வெளிப்பட்ட வேங்கைப் புலியெனக் கந்தன் — ஓடிக் கொண்டிருந்த களவாணியின் மீது பாய்ந்தது. அவ்வளவுதான்; அப்புறம் மனிதனுக்கும் புலிக்கும் நடக்கும் போராட்டமாகத்தான் அந்தக் காட்சி தென்பட்டது!

கந்தன் இதுவரையில் எங்கே இருந்தான், எப்படித் தெரிந்து கொண்டான் என்பதெல்லாம் அதிசயமான விந்தை.

அந்தக் களவாணித் தடியன் மேலெல்லாம் கீறல் பட்ட காயங்களுடன் ஒருவாறாகக் கையிலிருந்த மணிபர்ஸைத் தூக்கி எறிந்தான் எட்டத்தில். அப்போதுதான் கந்தனின் பிடிப்பும் அவனை விட்டது. வெறித்த பார்வையும் உறுமலுமாக அவனுக்குக் கந்தன் எச்சரிக்கை விட்டு விட்டுப் புதர்ப்பக்கம் ஓடினான். மணிபர்ஸைக் கவ்வி எடுத்துக்கொண்டு வந்து கனவானின் காலடியில் போட்டான். மறுபடியும் அந்தப் பக்கத்துக்கே ஓடினான், வைத்ததை எடுக்க.

அங்கிருந்த புங்க மரத்தடியையும் அதன் சுற்றுப் புறங்களையும் சுற்றிச் சுற்றி வந்தான் கந்தன். பாவம்! அவனால் அங்கே வைக்கப்பட்டிருந்த அவனுடைய உண்டி பறி போயிருந்தது. நெஞ்சப் பதற்றத்துடன் சிறிது தூரம் ஓடினான். ஓர் ஒதுக்குப்புறமாக இருந்த கக்கூஸ் சுவரின் பின்பக்கத்தில் அந்த உண்டி எறியப்பட்டுக் கிடந்தது. ஏக்கப் பெருமூச்சு விட்டபடியே அதைக் கவ்வி எடுத்துக் கொண்டு மீண்டும் மணல்புறத்துக்குத் திரும்பினான். தலைப்பாகைக்காரர் மிகுந்த நன்றிப் பெருக்குடன் அவனைத் தட்டிக் கொடுத்துத் தழுவிக் கொண்டார். வாய் விட்டுக் கூறத் தெரியாத ஏமாற்றத் துயரங்களை விழிகளில் தேக்கியவனாய், அவரது முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தபடி காலடியிலேயே சுருண்டு படுத்துவிட்டான் சிறிது நேரம். கந்தனுக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் நான்கு ரூபாய் என்பது அவருக்கு எப்படித் தெரியும்? அவர் தம் மணிபர்ஸுக்குள் சில்லறையாக இருந்த முழுத் தொகையை— ஒன்றரை ரூபாயையும் வஞ்சனை யில்லாமல் அவனது உண்டிக்குள் கவிழ்த்தார். கந்தனின் அபார உதவியால் அவருக்கு ஏறக்குறைய நூறு ரூபாயல்லவா மீண்டுவிட்டிருக்கிறது?

கந்தன் அவரிடம் விடைபெற்றுக் கிளம்பியபோது நடுப்பகல் வேளை. 'பகபக'வென்ற பசித்தீ அவனது வயிற்றிலே தகித்துக் கொண்டிருந்தது. வீட்டை நோக்கிச் சிறிது தூரம் சென்றவன் வியப்புற்று நின்றான். ஆஹா! என்ன அபூர்வமான வாசனைகள்! தெருக்கோடியிலிருந்த கலியாண பங்களா வாசலில் மலையொன்று குவிந்து கிடந்த எச்சில் இலைகளிலிருந்துதான் அந்த மணம் வந்து கொண்டிருந்தது. அந்த இலைக் குவியலை நாலைந்து நாய்கள் முற்றுகையிட்டிருந்தன. அங்கே செல்ல அவனுக்கு விருப்பமில்லை. ஆகவே வெறித்த பார்வையுடன் ஓர் கனங்காரத்தைக் கூட்டி உமிழ்ந்தான்: 'தூ பஞ்சைப் பயல்கள்! இவன்களே நின்னட்டும்!'

அடுத்த கணமே கந்தன், பக்கத்துச் சந்து வழியாக நடையைக் கட்டினான். அங்கே ஒரு தனியான வாய்ப்பு! அது — அதே கலியாணப் பங்களாவின் பின்பக்கத்துத் தோட்டம். அங்கேயும் மாமரத்தின் அடியில் ஒரு குப்பல் இலைகள் விழுந்து கிடந்தன.

கந்தன் ஒரே பாய்ச்சலாக இரும்பு முன் வேலியைத் தாண்டினான். வாயிலிருந்த தூக்கை அங்கிருந்த கல் தொட்டியினருகில் வைத்தான். பரபரப்பாக இலைக் குப்பலை நெருங்கினான். காய்கறி வகைகளும், சாதமும் நிறைந்த குப்பலைக் கிளறினான். இரண்டு முழுக் கவளங்களை விழுங்கினான். மற்றொரு குப்பலைக் கிளறினான். அதற்குள்ளிருந்து 'பளிச்'சென்ற ஒரு பொருள் மின்னிக் கொண்டு வெளிப்பட்டது!

கந்தன் சட்டென்று அதைக் கவ்வி எடுத்தான். கல் தொட்டியினருகில் வைத்திருந்த உண்டிக்குள் கொண்டு வந்து போட்டான். மீண்டும் இலைக் குப்பலை அணுகினான். இதற்குள் காக்கைக் கூட்டம் ஈயாக மொய்த்துக் கொண்டு விட்டது. அதனாலென்ன, கிடைத்தது போதுமே!

கந்தன் தன் உண்டியைக் கவ்விக்கொண்டான் — பிடித்தான் ஓட்டம். இரண்டு மைல் தூரமும் இரண்டே விநாடிகளில் அவனுக்கு முடிந்து விட்டது.

கந்தன் எதிர்பார்த்தபடியே அவனுடைய எஜமானர் ராஜபாதருக்கு உற்சாகம் தலைகால் புரியவில்லை. கந்தன் கொண்டுவந்

திருந்த அந்த விரல் வளையம் — ஒரு பவுன் எடையுள்ள தங்க மோதிரமாச்சே! பூங்கொடியை அழைத்து அவளது விரலொன்றில் செருகிப் பார்த்தான். அவனுக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை!

முன்னங் கால்களைச் செங்குத்தாக ஊன்றி நாக்கைத் துவளவிட்டு அமர்ந்தபடி பார்த்துக்கொண்டிருந்த கந்தனுக்கு உள்ளம் கர்வத்தால் பூரித்தது. அந்தப் பூரிப்பைக் காணச் சகியா இரு கண்கள் சூழ்ச்சியில் இறங்கியதை யார் அறிவார்? அதன் பயனாகக் கந்தனையும் ராஜாபாதரையும் பிரித்துவிடுமளவுக்குச் சதிகள் அநேகம் நிகழ்ந்தன.

ஒரு நாள் போலீஸ் அதிகாரிகள் ராஜாபாதரின் இருப்பிடத்தைத் தேடிக் கொண்டு வந்தார்கள். கந்தனைத் தங்களது இலாகாவில் துப்பறியும் வேலைக்கு எடுத்துக் கொள்ள விரும்புவதாகவும், அதற்குச் சன்மானமாக இருபது ரூபாயைப் பெற்றுக் கொண்டு அவனை விற்றுவிடும்படியாகவும் கோரினார்கள். ராஜாபாதர் நெடுஞ்சாண்கிடையாக அவர்களது கால்களில் விழுந்து ஊமை மொழியில் கதறி விட்டான். அவர்கள் மன இளக்கத்துடன் திரும்பிப் போனார்கள். இதைத் தொடர்ந்து நகரசபையின் நாய் பிடிப்புக் கோஷ்டியினரின் முயற்சிகளுக்கெல்லாம் கந்தன் 'டிமிக்கி' கொடுத்துவிட்டுவந்திருந்த நாட்கள் அநேகம். ராஜாபாதர் கந்தனைக் கட்டுப்படுத்திச் சில நாட்கள் வீட்டுடனேயே வைத்திருந்தான்.

வியப்பும் ஏமாற்றமும் கொண்ட நிலையில் திகைத்தான் குருவாடி. இவ்வளவு சூழ்ச்சிகளுக்கும் மூலகாரணம் அவன்தானே?

அன்றைக்கு விடியற்காலை நகரமே உறக்கத்தில் சொக்கிக் கிடந்தது. குப்பத்தில் வாழ்ந்த அத்தனை கோழிகளும்கூட வாயடைத்துக் கிடந்த வேளை. அப்போது இதுவரையில் நடந்திராத அதிசய பயங்கரம் ஒன்று நிகழ்ந்தது. குடிசை வாசலில் படுத்துக் கிடந்த கந்தனுக்கு என்ன தோன்றிற்றோ, எதைக் கண்டானோ திடுக்கிட்டு எழுந்தான். குடல் தெறிக்கும் வேகத்தில் ஓடிக் குடிசையைப் பல பல தடவைகளாகச் சுற்றிச் சுற்றி வந்தான். பின்னர் சற்றுத் தூரத்துக்கப்பால் மேற்கே போய் அமர்ந்தவனாய், நெடுங்குரலில் கூவிக் கூவி அழுதான். அவனுடைய ஓலம் குப்பத்தின் நித்திரையைக் குலைத்து விட்டது. சிலரைத் திடுக்கிட வைத்தது. சிலரை வலுவாக அச்சப்படுத்தியும் விட்டது. இதற்குக் காரணம் என்னவாக இருக்கலாம் என்பதைப் பற்றிக் குப்பத்துவாசிகள் பலவாறாகப் பேசிக் கொண்டார்கள்.

அன்றையப் பகற் பொழுது முழுவதிலும் கந்தன் உற்சாகமின்றி, ஏங்கிய முகத்துடன் சுருண்டு படுத்திருந்தான். அவனுக்குப் பிடித்தமான மசாலைத் துவட்டலும், இறைச்சிக் குழம்பும் தட்டில் நிறைந்திருந்தும் அவன் அதை ஏறிட்டும் பார்க்கவில்லை. அவன் மனத்தில் என்ன இருந்தனவோ? அவனுடைய முனகலுக்கு என்ன அர்த்தமோ? யாரால் அறிய முடிந்தது?

அன்று மாலை நான்கு மணி இருக்கும். குடிசைக்கு அருகே முருங்கை மரத்தினடியில் படுத்துக் கிடந்த கந்தன் திடீரெனக்











## நூற்றாண்டுக் கொண்டாட்டத்தில் பல்லாண்டு கூறுவோம்!



இந்த ஆண்டு தபால் கார்டின் நூற்றாண்டும் கூட. 1869-ம் ஆண்டு அக்டோபர் முதல் தேதி ஆஸ்ட்ரியா நாடு முதல் தபால் கார்டை வெளியிட்டது.

ஆதாரம்: 'ஸ்டேட்ஸ்மன்'

தகவல்: 'நாயக்'

காணாமல் போய்விட்டான்! அவனுடைய வசூல் உண்டி கட்டிலின் கீழே வைத்தபடியே யிருந்தது. எப்போது போனான், எப்படிப் போனான், எங்கே போனான் — ஒன்றும் புரியவில்லை. அதைத் தெரிந்து வந்து சொல்லுவோருமில்லை.

ராஜாபாதர் 'கூகூ'வென்று அலறினான். பூங்கொடியும் மற்ற சில்லூண்டிகளும் மூலைக் கொருவராக ஓடித் தேடினர்; பயனில்லை.

குப்பத்துக் கீழண்டைக் கோடியில் கூவம் வாராவதியின் கீழ் இறக்கத்திலே ஓர் ஒதுக்குப்புறமான இடம். அங்கே அன்றிரவு ஏழு மணிக்கெல்லாமே ஆணும் பெண்ணும், குழந்தைகளுமாக ஊரே திரண்டு கூடியிருந்தது. காரணம், அரசாங்கத்தாரின் சுகாதாரப் பிரசாரப் படங்களையும், அயல் நாட்டு மக்களின் வாழ்வுப் படங்களையும் சினிமாத் திரை போட்டுக் காண்பிக்கப் போகிற செய்திதான். இலவசக் காட்சியாயிற்றே. இந்தச் சந்தர்ப்பத்தை யார் நழுவ விடுவார்கள்? குப்பத்துவாசிகளில் ஒரு வீடும் பாக்கி யில்லாமல் அத்தனை பேரும் அங்கே நிறைந்திருந்தார்கள். ராஜாபாதருக்கும் அவனைச் சேர்ந்த நபர்களுக்கும் வசதியான உயர மேட்டில் இடம் கிடைத்து விட்டது.

இரவு எட்டு மணிக்கு ஆரம்பிக்கப்பட்ட திரைப்படக் காட்சிகள் பன்னிரண்டு மணி வரையில் காண்பிக்கப்பட்டும் குப்பத்துக் கூட்டத்துக்கு மட்டும் முழுத் திருப்தியும் ஏற்படவில்லை. கடைசிப்படம் நடந்துகொண்டிருக்கும்போது நடுநிசி வேளை. அப்போது கூட்டத்திலிருந்தவர்களிடையே திடீரென்று ஒரு பரபரப்பு ஏற்பட்டது. 'சடசட'வென்று பத்துப் பேர் எழுந்தார்கள். சிலர் 'என்ன என்ன' என்று கத்திக் கொண்டே விரைந்து ஓடினார்கள். அதற்குக் காரணம் யாரோ ஒரு குப்பத்து வாசியை யாரோ வலிமையாகத் தாக்கிவிட்டதால் அவன் மேலெல்லாம் ரத்தக்களறியாகி விட்டதாகவும் இனி பிழைக்க மாட்டாத நிலையிலிருந்த அவனைத் தூக்கிக் கொண்டு இரண்டு பேர் அந்த வழியாக ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போயிருப்பதாகவும் கூறினார்கள். இந்நிலையில் அமைதி குலைந்து விடவே திரைப் படக் காட்சிக்கும் முடிவு ஏற்பட்டுவிட்டது. இந்த விவரங்கள் எதையும் அறியாதவன்—ஊமை ராஜாபாதர் ஒருவன்தான்.

இரண்டு சகாக்களின் தோள் உதவியுடன் ராஜாபாதர் தன் குடிசைக்கு வந்து சேர்ந்தான். முழு நிலவு தினமாகையால் வெளிச்சம் பட்டப்பகல் போலிருந்தது.

ராஜாபாதரின் குடிசை அளித்த காட்சி அனைவரையும் திடுக்கிட வைத்தது. அவனது குடிசைக் கதவின் பூட்டு உடைக்கப்பட்டு உட்புறம் திறந்து கிடந்தது. உள்ளே சட்டி பானைகளெல்லாம் நொறுங்கிக் கால்களில் மிதிபட்டன. அவற்றிலிருந்த தண்ணீரெல்லாம் கீழே ஆறாக ஓடியிருந்ததால் தரை முழுதும் சேறாக மாறியிருந்தது. ஒரே அலங்கோலக் காட்சி!

ராஜாபாதர் 'ஓ'வெனக் கூக்குரலிட்டான். குப்பத்துவாசிகள் கூடிவிட்டார்கள். ராஜாபாதர் உள்ளே யிருந்த சின்ன தகரப் பெட்டியைப் பார்க்குமாறு பூங்கொடியிடம் சாடை காட்டி ஓலமிட்டான். சிறிது நேரத்துக்குப் பின், ''ஐயையோ! பெட்டியைக் காணோமே! ஒரு பவுன் மோதிரமும் போயிடுச்சே!'' என்ற அலறல் அவளிடமிருந்து வெளிப்பட்டது. ராஜாபாதர் வயிற்றிலடித்துக் கொண்டு கதறினான். எல்லோருமே மிகுந்த அனுதாபத்துடன் குடிசையின் நாலாபுறங்களையும் சுற்றிப் போய் ஆராய்ந்தார்கள். சிலர் கூவத்துக் கரையோரமுள்ள ஒற்றையடிப் பாதையைப் பார்த்துக் கொண்டு, மேற்கே ஓடினார்கள். அங்கே துண்டு துண்டாகச் சிதறிக் கிடந்த துணிக் கிழிசல்களையும் அவற்றிலிருந்த இரத்தக் கறைகளையும் கண்டவர்கள் அரண்டு விட்டார்கள். கூட்டமனைத்தும் ராஜாபாதரை இட்டுக் கொண்டு அங்கே விரைந்தது. அங்கிருந்த காட்சி அனைவரையும் திடுக்கிடச் செய்துவிட்டது.

ஒரு பக்கத்தில் பச்சை நிறச் சட்டை ஒன்று தாறுமாறாகக் கிழிக்கப்பட்டு இரத்தக் கறையுடன் சிதறிக் கிடந்தது. மற்றொரு பக்கத்திலே வீசப்பட்டுக் கிடந்த தகரப் பெட்டி. அப்போதே பலபேர்களின் குரல்களும் இந்தச் சட்டைக்குரியவன் குருவி ஜோஸ்யன் குருவாடிதான் என்பதை ஒருமிக்க வெளியிட்டன. சற்று முன்னர் அபாயமான நிலையில் ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் செல்லப்பட்டவனும் அவனேதான் என்பதை உறுதிப் படுத்தின. அந்தக் குருவாடி இனியுமா பிழைக்க முடியும்?

ஊமை ராஜாபாதரை நோக்கி மனமிளகிச் சொரிந்த அனுதாபங்கள் ஒரு புறமும் அதே சமயத்தில் போக்கிரி குருவாடிக்குக் கிடைத்த தண்டனையின் மகிழ்ச்சி ஒரு பக்கமுமாக ஊர்ச் செய்தி பரவத் தொடங்கிவிட்டது.

முருங்கை மரத்தின் மறைவில் கத்தி விரல் வெட்டப்பட்ட இரத்தக் காயங்

களுடன் அசைவற்றுக் கிடந்த உடலொன்றைக் கண்டதும் 'ஓ'வென ஓலமிட்டாள் பூங்கொடி. தலையிலும் வாயிலும் அடித்துக் கொண்டவளாக அலறினான் ராஜாபாதர். அலங்கோல நிலையில் அங்கே கிடந்த உடல் அடிமைக் கந்தனுடையது!

அவன் இந்தப் பத்து நாட்களாக எங்கே இருந்தான், எப்படி, எப்போது இங்கே வந்தான் என்பதெல்லாம் எவருக்கும் தெரியாத மர்மம்!

மொழி யில்லாத மொழியாக அலட்டிய வண்ணம் கந்தனின் தலையைக் கைகளால் பற்றித் தன் மடியில் கிடத்திக் கொண்டான் ராஜாபாதர். அப்பொழுது கந்தனின் வாய்க்குள் அடங்கியிருந்த பச்சை நிறச் சட்டையின் பையும், அத்துடன் சுருண்டிருந்த மோதிரமும் கீழே விழுந்து நிலவொளியில் பளிச்சிட்டன. கந்தன் அளித்த கடைசியான நினைவுப் பரிசு அது!

கற்சிலைகள் போல் நின்று கண்ணீர்ப் பெருக்கும், கலங்கிய முகமுமாகக் காட்சியிடும் கூலத்துக் குப்பாந்தான் கந்தனைக் கண்ட கடைசிக் கண்கள். அது இருக்கட்டும்!

'விலங்கினத்திலும் கண்கண்ட கர்மயோகி' என்கிற மதிப்பை! வழங்கியிருந்த சென்னையின் கண்கள். இனி கந்தனைக் காணாத கண்கள் ஆகிவிட்டனவே. இதற்குச் சமாதானம் என்ன கூறலாம்?

---



**வ.** சா. நாகராஜன் அவர்கள் எழுதிய 'தேவி' என்னும் சிறுகதையை நான் மிகவும் விரும்பிச் சுவைத்தேன். எளிய நடையில் சிறு சிறு வரிகளில் ஒரு பெரிய உண்மை — ஒரு பெரிய விளக்கம் — அழகாக அமைக்கப்பட்டிருந்தது கதையில். ஆண்மையின் தவற்றுக்குத் தண்டனை தராத உலகம் வெறும் வதந்தியைக்கூட நம்பிப் பெண்மையை ஏன் பழி வாங்குகிறது என்ற உஷாவின் ஆணித்தரமான கேள்விக்கு என்போன்ற எண்ணற்றவர்களுக்கு இதுவரை விடை தெரியாமல் இருந்தது; அல்லது பொருந்தாத ஏதோ ஒன்றை விடையாக எண்ணித் திருப்திப்பட்டுக் கொண்டிருந்தோம். ஆனால் கதாசிரியர் நாகராஜன் உஷாவின் தந்தை வாயிலாகப் பெண்மையின் உயர்வுக்குக் கொடுத்த விளக்கம் மெய் சிலிர்க்க வைத்து விட்டது.

அந்தியூர்,
11—9—69 மு. தவசியப்பன்

**பெ**ண்மையின் உயரிய தன்மையை விளக்கும் பல சிறுகதைகளையும், நாவல்களையும் படித்திருக்கிறேன். ஆனால் செப்டம்பர் 7, 14ந் தேதி கல்கி இதழ்களில் வெளிவந்த வ. சா. நாகராஜன் அவர்கள் எழுதியுள்ள "தேவி" என்ற சிறுகதையைப் போல் இதுவரை படித்ததில்லை! இது கற்பனைக் கதை போல் தோன்றவில்லை. எங்கோ, எப்போதோ யாருடைய வாழ்க்கையிலேயோ நடந்த உண்மைச் சம்பவங்களாகவே தோன்றுகிறது. சம்பவங்கள் அனைத்தும் என்னை மெய் சிலிர்க்க வைத்தது.

திருப்பதி
11—9—69 ச. ஆறுமுகம்

**கா**லஞ்சென்ற செஸில் பி. டெமிலி ஒரு முறை "பைபிளில் ஒரு வரியைக்கூட என்னால் திரைப்படமாகத் தயாரிக்க முடியும்" என்று சொன்னார். "காந்திஜி விரும்பிய கீதம்" படிக்கும் வரையில் ஒரு வரியில் என்ன இருக்கும், எப்படிப் படமாக்க முடியும் என்று யோசித்து ஒன்றும் விளங்கவில்லை. இப்போதுதான் வார்த்தைக்கு வார்த்தை ஒரு சரிதமே இருக்க முடியும் என்று தெரிந்து கொண்டேன். வைஷ்ணவ ஜனதோ என்ற பாடலுக்கு ஸ்ரீ ரா. கணபதி கொடுத்து வரும் விளக்கங்களைக் கட்டாயம் ஒரு புத்தகமாக வெளியிட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பங்களூர்—4
11—9—69 எஸ். வி. தியாகேசுவர்

**இ**து காந்தி நூற்றாண்டு. கல்கியில் ராமாயணம் இப்போது வெளிவருவது அண்ணலார் ஆத்மாவுக்கு எத்தகைய திருப்தியை அளிக்கும் என்பதைக் கூறத் தேவையில்லை. தலைவர் ராஜாஜியின் அன்புக் கட்டளைப்படி சக்கரவர்த்தித் திருமகனது புண்ணிய சரித்திரத்தை இந்த நல்ல சந்தர்ப்பத்தில் மறுபடியும் கல்கியில் வெளியிடுவதன் பொருத்தத்தை எண்ணிக் குதூகலிக்கிறது என் உள்ளம். இராமாயணத்தைப் பக்தி சிரத்தையோடு படித்து, நாம் நல்வழியில் நடக்க அப்பிரபுவின் அருளை இறைஞ்சுவோமாக!

குன்றத்தூர்,
10—9—69 வி. ச. வாசுதேவன்

"**பெ**ண் தலைவியானால்?" என்ற துணுக்கும் அந்தத் துணுக்கின் அருகில் பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தியின் உருவைப் போட்டிருந்ததும் என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. அரசியலில் மாறுபட்ட கருத்துக்கள் நிலவுவது இயற்கை. அதற்கும், காலத்தையும், கலாசாரத்தையும் ஒட்டியே எழும் பழமொழிகளுக்கும் என்ன சம்பந்தம்?

மஞ்சக்கொல்லை,
23—8—69 ஏ. ஷேக் அலாவுதீன்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon